அலெக்சேய் அர்புஸவ்

# தான்யா

நாடகம்





ராதுகா பதிப்பகம்
மாஸ்கோ



விற்பனையாளர்கள்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்
சென்னை

"...இப்படித்தான் ஆடம்பர மற்ற நிலைக்கு நானே ஒரு மாதிரி யாக பிறந்தேன், உலகிற்கு வந் தேன், பின்னைய நாளில் ஓர் உயர்ந்த, முற்றிலும் பூரணத்துவம் பெற்ற படைப்பாகத் திரும்பவும் பிறப்பதற்காக..."

**மைக்கேல் ஏஞ்சலோ புவானரோத்தி**
'சொனேட் XXIV'

## கதாபாத்திரங்கள்

தான்யா
ஹேர்மன்
ஷமானவா, மரீயா
இக்னாதவ், அலெக்சேய் இவானவிச்
தூஸ்யா
மிஹேய்
பாட்டி
கிரீஷ்சென்கோ, அந்திரேய் தராஸவிச்
டாக்டர்
ஓல்கா
குளிர்கால விடுதியின் சொந்தக்காரி
வாசின்
பஷ்னியாக்
"ஃபூர்மனவ்"
"சபாயெவ்"

‘‘மாலுமி’’
பறட்டைத் தலைமயிர் இளைஞன்
இளைஞன்
ஹேர்மனின் விருந்தினர், தங்கச் சுரங்கத்தில்
பணியாற்றும் இளைஞர்கள்

# முதல் பாகம்

## காட்சி ஒன்று

*நவம்பர் பதினான்கு, **1934**.*

*மாஸ்கோ. குளிர்கால ஒளிமங்கும் மாலைநேரம். மணி ஆறாகப் போகிறது. ஹேர்மனின் குடியிருப்பு. இருவருடைய மகிழ்ச்சியான காதலையும் நட்பையும் வெளிப்படுத்தும் ஒவ்வொரு பொருளையும் கொண்ட சொகுசான ஓர் அறை. தெரு விளக்குகளின் ஒளியில் கனமானப் பனி மெதுவாக விழுந்து கொண்டிருக்கிறது. தான்யா வாயிற்படியில் நிற்கிறாள். அவள் குளிரில் நடுங்குகிறாள், ஆனால் மகிழ்ச்சியாக இருக்கிறாள். அவள் வெண்ணிற மென்மயிர் மேலங்கி அணிந்து கொண்டிருக்கிறாள், பனி மூடிய வெண்பனிச் சறுக்குக் கட்டைகளை வைத்துக் கொண்டிருக்கிறாள். சிறிய, இலேசாக நிமிர்ந்த மூக்குடைய, கண்டிப்புமிக்க, சுமார் பதினெட்டு வயதுப் பெண் தூஸ்யா அவளைச் சந்திக்க ஓடுகிறாள்.*

*தூஸ்யா:* இதோ பாருங்களேன், எப்போதுமே நீங்க வெண்பனிச் சறுக்குக்கட்டைகளோட அறைக்குள்ளாக வர்றீங்க...

*தான்யா:* ஹேர்மன் இன்னமும் இங்கே வரலையா?

பாக்கிறதுக்காக மட்டுமே வந்தேன்... (தனது மென்மயிர் மேலங்கியைக் கழற்றுகிறாள்.) என்ன அருமையான பனி! சிறுமியா இருந்த போது செய்தது போல, தலையைத் தூக்கி ஐஸ்கிரீம் என எண்ணி அப்படியே அதை விழுங்கினேன்... கையுறைகளுமே சொட்டச் சொட்ட நனைந் தன!

தூஸ்யா அவளது மென்மயிர் மேலங்கியை எடுக்கிறாள்.

யாராவது வந்தாங்களா?

தூஸ்யா: தொலைபேசியைப் பயன் படுத்துறதுக் காகப் பக்கத்து வீட்டிலேயிருந்து வந்தாங்க. அவுங்க குழந்தைக்கு ரொம்பக் காய்ச்சலா இருக்கு.

தான்யா: காய்ச்சலா? (கண் இமைகளிலிருந்து பனி யைத் துடைக்கிறாள்.) ஓ, ஆமாம், நீ இது பத்தி எங்கிட்டே சொல்லிக் கிட்டிருந்தாய்... குஞ்சு செமியோன் செமியோனவிச்சுக்குச் சாப்பாடு கொடுத்திட்டாயா, தூஸ்யா?

தூஸ்யா: உங்களுக்கு முன்னாலேயே அது சாப் பிட்டாச்சு. (ஒரு கூண்டிற்குள்ளாகக் குஞ்சுக் காக்கை அலைவதைச் சுட்டிக் காட்டுகிறாள்.) எப்படிக் கர்வத்தோடு இருக்கு, பாருங்க. சும்மா உக்காந்து, இன்னொரு இடத்துக்குப் போகலெ. (மென்மயிர் மேலங்கியுடனும் வெண்பனிச் சறுக் குக்கட்டைகளுடனும் வெளியே போகிறாள்.)

தான்யா வானொலியை இயக்குகிறாள். மகிழ்ச்சி தரும் போல்கா என்னும் நடன இசை அறையை நிரப்பு கிறது.

தான்யா (கத்தியபடி): மதியச் சாப்பாடு தயாரா?

தூஸ்யா (தொலைவில் இருந்தபடி): ஆமாம்.

தான்யா (இசைக்கேற்றபடி அறையைச் சுற்றி வந்தபடி):

எல்லாமே தயார்... எல்லாமே தயார்...
ஹேர்மன் எங்கே? ஹேர்மன் எங்கே?

கதவு மணி ஒலித்தல்.

அதோ ஹேர்மன், அதோ ஹேர்மன்,
என் அன்பே, என் உயிரே!

(நாட்டியமாடியபடி ஆடை அலமாரிக்குள்ளாக வேடிக்கையாகச் சென்று கதவுகளைச் சாத்துகிறாள்.)

ஹேர்மன் உள்ளே நுழைகிறான். அவனுடைய கைகளில் ஒரு பொட்டலமும் ஒயின் போத்தலும் இருக்கின்றன.

ஹேர்மன்: தத்யானா எங்கே?

தூஸ்யா ஆடை அலமாரியைப் பார்த்து, நம்பிக்கையில்லாதபடி தனது கையை அலைத்தபடி வெளியேறுகிறாள். ஆடை அலமாரிக்குள்ளே உறுமல் கேட்கிறது.

(அவன் சுற்றித்திரும்புகிறான், வானொலியை நிறுத்தி விட்டு ஆடை அலமாரிக்குப் போகிறான். அச்சுறுத்தக் கூடியவாறு.) வெட்கக் கேடு! இதற்

குள்ளாக யார் நாயை விட்டது?! ஆமாம், ஆமாம்... ஒரு சொறி நாய்தான், வாசனை யிலிருந்தே என்னாலே கூற முடியும்.

*ஆடை அலமாரியிலிருந்து குரைக்கின்ற ஓசை கேட் கிறது. ஹேர்மன் சாவியைத் திருப்பி, ஆடை அலமாரி யைப் பூட்டுகிறான். அங்கிலிருந்து ஒரு துக்ககரமான கீச்சொலி கேட்கிறது.*

அப்படியா, மதிப்புக்குரிய நாயே, நீங்க பயந்துட் டீங்க. கருணை காட்டக் கெஞ்சுகிறீங்களா?

தான்யா (மெல்லிய குரலில்): அருமை ஹேர்மன் அவர்களே, அப்பாவி நாயை வெளியே விடுங்க! நான் கடிக்கலெ, நான் நேர்மையான, நாகரிக மான நாய்.

ஹேர்மன்: மதிப்புக்குரிய நாயே, நீங்க கடிக்கமாட் டீங்க என்பது நிச்சயந்தானா?

தான்யா (அதே குரலில்): என்னுடைய நேர்மை யான நாயின் பேரால் உங்களுக்குச் சொல் றேன்.

*ஹேர்மன் ஆடை அலமாரியைத் திறக்கிறான். தான் யா ஓடிவந்து அவன் கழுத்தை கட்டியணைக்கிறாள். அவளைத் தனது கைகளில் பிடித்துக்கொண்டு அறை யைச் சுற்றி சுழற்சி நடனமாடுகிறான். அவனுடைய கண்களிலும், நெற்றியிலும், கன்னப் பொறிகளிலும் அவள் முத்தமிடுகிறாள். இருவரும் சிரிக்கிறார்கள்.*

தான்யா: இதோ, இம்முத்தங்கள் உனக்கு, இப் படிப்பட்ட நாளிலும் தாமதமா வந்துக்கிட்டு. (மெதுவாக.) இதோ பாரு, நாளை, உனக்கு

நினைவிருக்கா...

ஹேர்மன்: ஆமாம்... நவம்பர் பதினைஞ்சு...

தான்யா: பதினைஞ்சு... நாளைக்கு ஓராண்டுக்கு முன்னால் நாம் சந்தித்தோம்...

ஹேர்மன் (அவளிடம் பொட்டலத்தைக் கொடுத்துக் கொண்டு): இதோ... இது உனக்குத்தான்...

தான்யா (வேகமாகப் பிரித்துக்கொண்டே): இசை! (ஒரு சின்ன, பிரகாசமாக வர்ணந்தீட்டப்பட்ட விளையாட்டு இசைப் பெட்டியை அவள் பிடித்துக்கொண்டிருக்கிறாள்.) கேள், இது பாடுது. (கைப்பிடியைத் திருகுகிறாள், மெல்லிய இன்னிசையோடு கூடிய கணகண ஒலி கேட்கிறது.) அது நம்மைப் பற்றிய ராகத்தைப் பாடிக்கிட்டிருக்கு, ஹேர்மன்... என் அன்பரே, நாளைய நமது ஆண்டு விழாவிற்கு வாழ்த்துகள்...

ஹேர்மன்: உனக்கும் வாழ்த்துகள்...

*அவர்கள் இருவரும் கைகளைப் பற்றிக்கொண்டு மேசைக்குச் செல்கிறார்கள்.*

தான்யா: ஒயின்?

ஹேர்மன் (புட்டியைத் திறந்து கொண்டே): ஆமாம்... ஸால்ஹினோ ஒயின்.

தான்யா: என்ன பெயர்... ஸால்-ஹி-னோ! அது பயணம் போவது போல இருக்கு! இன்றைக்கு நீயும் நானும் அருமையாச் சாப்பிடப் போறோம், இல்லையா ஹேர்மன்? எவ்வளவுக்கு மகிழ்ச்சி இருக்க முடியுமோ அவ்வளவுக்கு இருப்போம்.

ஹேர்மன் (ஒயினை ஊற்றிக்கொண்டே): அருமையான யோசனை. (தனது கண்ணாடிக் குவளையை உயர்த்திக்கொண்டு.) உனக்காக!

தான்யா: வருகின்ற நவம்பர் பதினைஞ்சுக்காக.

ஹேர்மன்: ஆயிரத்துத் தொள்ளாயிரத்து முப்பத்தஞ்சில்...

தான்யா: முப்பத்தாறில்...

ஹேர்மன்: முப்பத்தி எட்டில்! நமது ஐந்தாவது ஆண்டு விழாவைக் கொண்டாடிக் கிட்டிருப்போம்!.. இது ரொம்ப இன்ட்ரஸ்டிங், முப்பத்தி எட்டிலே நாம் எப்படி இருப்போம்? எனக்குத் தெரியாது.

தான்யா: எனக்குங் கூடத் தெரியாது. இப்போதிலிருந்து நாலு ஆண்டுகளுக்குப் பின்னாலே நாம் வயசாகிப் போயிருவோம்... உனக்கு இருபத்தெட்டாகவும், எனக்கு இருபத்தி ஐந்தாகவும் இருக்கும். அந்நேரத்திலே நீ ஒரு புகழ்பெற்ற டிசைனராக மாறி இருப்பாய்.

ஹேர்மன்: அப்ப நீ?

தான்யா: நானோ... நான் உன்னோட காதல் கொண்டிருப்பேன்!

ஹேர்மன்: அப்ப இந்த டோஸ்ட் நவம்பர் பதினைந்து, ஆயிரத்துத் தொள்ளாயிரத்து முப்பத்து எட்டுக்காக!

தான்யா: உர்ரா! ஆயிரத்துத் தொள்ளாயிரத்து முப்பத்தெட்டுத் தடவைகள் — உர்ரா!

அவர்கள் பருகுகிறார்கள்.

இன்றைக்கு என்ன செஞ்சிக்கிட்டிருந்தே?

ஹேர்மன்: மக்கள் கமிஸார் அலுவலகத்தில் இருந்

தேன். பிறகு தங்கம், பிளாட்டினம் வைரத் தொழிற்சாலை தலைமை நிலையத்தில் இருந் தேன். அங்கே பல்வேறு மக்கள் குழுமியிருந் தாங்க — உண்மையில் கஸாக்ஸ்தானிலிருந்து சில வகுப்பினர்... தங்களுடைய திட்டத்தை நிறை வேற்றிக் கொள்றதுக்காக பயங்கரமான முறை யிலே கத்திக்கொண்டும், அச்சுறுத்திக்கொண்டும் இருந்தாங்க. நம்ப முடியாத வகையில் பேரி ரைச்சல் எழுப்பிக்கிட்டிருந்தாங்க.

*தான்யா:* ஊம், உன் காரியங்கள் என்னவாச்சு?

*ஹேர்மன்:* அமைப்புப்படங்கள் எல்லாம் மக்கள் கமிஸாரிடம் இருக்கு. ஆகவே, உனக்குக்கூட எல்லாந் தெரியும்... எந்த நேரத்திலும் நாங்க ஒரு முடிவை எதிர்பார்த்துக் கிட்டிருக்கோம்.

*தான்யா:* நீ பீதியடைஞ்சியா?

*ஹேர்மன்:* நிச்சயமா.

*தான்யா:* அப்ப நீ ஒரு முட்டாள். உன் தங்கத் தூர்வாரி எந்திரம் மிகவும் நல்லாயிருக்கும்! நிச்சயமாக!

ஹேர்மன் பெருமூச்சு விடுகிறான்.

உனக்குச் சூப்புப் பிடிக்குதா?

*ஹேர்மன் (சாப்பிடுகிறான்):* ஊஹும்.

*தான்யா:* ஹேர்மன்... நீயோ... அந்த வழியில் நீ என் உயிரைக் காப்பாத்த முடியுன்னா, ஒரு கரப்பான் பூச்சியைச் சாப்பிடுவாயா?

*ஹேர்மன்:* ஆம், சாப்பிடுவேன்... சேச்சே! (கரண் டியைக் கீழே இறக்குகிறான்.) எவ்வளவு சாபக் கேடான எண்ணங்கள்! பி...ர்...ர்!

தான்யா (ஒயினை ஊற்றியபடி): சாபக்கேடான எண்ணங்களுக்காக! (கத்துகிறாள்.) ஆமாம்! எல்லாத்துக்கும் முக்கியமானதை உனக்குச் சொல்ல மறந்துட்டேன்! (புதிர் போட்டபடி.) இன்றைக்கு நான் கிட்டத்தட்ட பாதையைத் தவற விட்டுட்டேன்.

ஹேர்மன் (வெடிச்சிரிப்புடன்): ஸகோல்னிகி பார்க்கிலே? பொய் சொல்லாதே.

தான்யா (உணர்ச்சி வயப்பட்டு): ஆம், சத்தியமா! வெண்பனிச் சறுக்குக்கட்டைகளோட நடக்கிறதுக்கு இன்னைக்கு ஏத்த அருமையான காலநிலை. சுற்று வளையத்தை விட்டு நீண்ட தொலைவுக்குப் போய்ட்டேன். அங்கே உண்மையான காடே இருந்துச்சு, தெரியுமா? எங்க பார்த்தாலும் ஒரே அமைதி, யாருமே இல்லை, பறவைகள், வானம், பனி மட்டுந்தான். திடீரென்று நான் பயந்து போனேன். மாஸ்கோ ரொம்ப நீண்ட தூரத்திலே—ஆயிரக்கணக்கான கிலோமீட்டர் தொலைவிலே, நானோ ஓநாய்களும், கரடிகளும் சுற்றித் திரிகிற எங்கோ வடக்கில் இருப்பதாக உணர்ந்தேன்... ஐயோ, மிகவும் கலங்கிப் போனேன்... அச்சத்தால் கண் கலங்கத் தொடங்கினேன்... பிறகு திடீரென்று சுமார் ஒரு நூறு அடிகளுக்கு அப்பால் ஒரு டிராம் செல்றதைக் கேட்டேன்.

ஹேர்மன் (சிரித்தபடி): கோழை! நீ வெட்கப்படலே?

தான்யா: இன்னிக்கு முட்டாள்தனமான, மகிழ்ச்சியான நாள்... உன் தட்டைக் கொடு. அடுத்த உணவு வகையைக் கொண்டுவாறேன். (அறை

யிலிருந்து வெளியேறுகிறாள்.)

ஹேர்மன் பத்திரிகை பார்த்துக்கொண்டிருக்கிறான்.

(சமையற்கட்டிலிருந்து திரும்ப வருகிறாள். அவனுக்கு முன்னால் தட்டை வைக்கிறாள்.) பத்திரிகையைத் தூரப் போடும்படி நான் உனக்குச் சொல்லி இருக்கேன். சாப்பாட்டு மேசையில் படிப்பு வேண்டியதில்லை!

ஹேர்மன்: இன்னைக்கு 'பிராவ்தா' பத்திரிகையில் மரீயா ஷமானவா உடைய படம் வந்திருக்கு. எனிஸேய் தங்கச் சுரங்கங்களின் ஒன்றில் அவள் நிர்வாகி. அவளுக்கு லெனின் விருது வழங்கப்பட்டிருக்கு.

தான்யா: இன்னொரு முள்கரண்டி எடு. அவளை உனக்குத் தெரியுமா?

ஹேர்மன்: ஷமானவாவை? தெரியாது... ஆனா தலைமை நிலையத்தில் அவளைப் பத்தி நிறையப் பேசியிருக்காங்க.

தான்யா: அப்புறம் நீங்க, தங்க வேட்டைக்காரங்க, எப்போதுமே ஒருத்தரை ஒருத்தர் புகழ்ந்துகுவீங்க. எங்கே பாக்கலாம். (பத்திரிகையைப் பார்க்கிறாள்.) இந்தப் பெண்ணுக்குச் சற்று நிமிர்ந்த மூக்கா இருக்கே!

ஹேர்மன்: உண்மையாவா?

தான்யா: நிச்சயமா, சற்று நிமிர்ந்த மூக்குத்தான். (ஒயினை ஊற்றுகிறாள்.) சற்று நிமிர்ந்த மூக்குக்காரங்களுக்காக என் டோஸ்ட்.

ஹேர்மன்: நீ நல்லாக் குடிச்சிருக்கே, பேதையே!

தான்யா:

*கார்! கார்! — அண்டங்காக்கை பாடுச்சு*
*ஒத்தைக் காலிலே குதித்துச்சு.*

*உண்பது முடிகிறது. தூஸ்யா நுழைகிறாள். அவள் மேசையைச் சுத்தம் செய்கிறாள். ஹேர்மன் சோபா விலே அமர்கிறான். கதவு மணி ஒலிக்கிறது.*

*யார் அது? (தூஸ்யாவிடம்.) இல்லை, நான் போறேன். நீ போய்ச் சாப்பிடு, தூஸ்யா. (வெளியேறுகிறாள்.)*

ஹேர்மன்: தூஸ்யா, இந்தப் புத்தகத்தைப் பார்த் தாயா? 'மதிப்புமிக்க தாதுக்கள்' என்று பெயர்... இப்படிப்பட்ட சிவப்பு அட்டை போட்டிருக்கும்.

தூஸ்யா (தட்டுகளைச் சுத்தம் செய்து கொண்டு): அதை நான் படிச்சுக்கிட்டிருக்கேன், ஹேர்மன் நிக்கலாயெவிச்.

ஹேர்மன்: நீ அதைப் படிக்கிறாயா? ஆனா அது... நிபுணர்களுக்கு உரியதாச்சே.

தூஸ்யா: ஆமாங்க... அது கற்களைப் பத்தியது. ரொம்பவும் ஆர்வம் மூட்டுறதா இருக்கு. படிச்சு முடிச்சா, உடனேயே மேசையிலே வச்சுட்டுப் போறேன். (தட்டுகளோடு வெளியேறுகிறாள்.)

ஹேர்மன் (முறுவலித்தபடி): ''கற்களைப் பத்தி யது...'' சைத்தானுக்குத் தெரியும்!

தான்யா (நுழைகிறாள்): அது மருத்துவர் — தவ றான குடியிருப்புக்கு வந்துட்டார். நம்ம பக்கத்து வீட்டுக்காரங்களைப் பார்க்க வந்திருக்கார். அவுங்க குழந்தைக்கு உடம்பு சரியில்லை.

ஹேர்மன்: ரொம்பவா சீரியஸ்?

தான்யா: வெளிக்கு அப்படித் தான் தெரியுது.

*(சோபாவில் ஹேர்மனுக்கு அருகில் அமர்கிறாள். வானொலியை இயக்குகிறாள்.)*

*இசை.*

*நீ அதைக் கேட்கிறாயா? 'மிஞ்யோனா இசைப் பாடல்'... அம்மா அதை எப்பவும் பாடுறது வழக்கம். எங்க பள்ளியில் பாடுறதுக்குக் கத்துக் கொடுத்தா. ''ரியாபீனின், பியானோவுக்குப் போ,'' என்று அவள் என்னை அழைத்தபோது வேடிக்கையா இருந்தது. அப்புறம் மாலை நேரங் களிலே, வேலையிலிருந்து அப்பா திரும்பிவந்த சமயம், பியானோ மீட்டி அவள் பாடுறது உண்டு:*

*''எல்லாம் ஒளிவீசும் எழில்மிகு நிலமே*
*பல்விதப் பூக்களும் பாங்குற வருமே!*
*சில்காற் றிலாடும் சீரிளமை மலரே!*
*பல்லார் போற்றும் பசுமைச் செடியே!..''*

*இப்போ இருப்பதைப் போல வெளியே பனி விழுந்துகொண்டிருந்தது, கிரஸ்னதார் முழுக்க தூய்மையான வெள்ளை நிறமாகயிருந்தது, தேவ தைக் கதையில் வரும் பொம்மை நகரம் போல... (இடைவெளி.) இப்படித்தான் குழந்தைப் பருவம் முடிந்தது: ஸ்கேட் செய்யுமிடம், பள்ளி சுவர் செய்தித்தாள், இந்த இளம் பயனீர்க் கழகம் இன்னும் எங்களது சத்தம் போடும் வாத்தியக் குழு. ஹேர்மன், உனக்குத் தெரியுமா, எனது குழந்தைப் பருவத்தை மற்றொரு நகரத்தில்,*

மிக மிகத் தொலைவில் நான் விட்டுவிட்டது போல எனக்கு எப்பவுமே தோனுது. ஆனா அது இன்னமும் முடியலே. நான் இல்லாமல் அது தொடரத்தான் செய்யுது. (சற்று இடை வெளிக்குப் பிறகு.) ஓராண்டுக்கு முன்னாலே நாம் எப்படிச் சந்திச்சோம் என்பது உனக்கு நினைவிருக்கா?

ஹெர்மன்: த்வெர்ஸ்காயா தெருவிலே அலைஞ்சு திரிந்தோம்...

தான்யா: பணிகாரங்களைத் தின்னுக்கிட்டிருந் தோம்...

ஹெர்மன்: மூன்று திரைப்படங்களுக்குப் போ னோம்...

தான்யா: ஒரே படத்தை மூன்று தடவைகள் பாத் தோம். பிறகு திரும்பவும் மாஸ்கோவைச் சுற் றிலும், முதலாவது டிராம்கள் வண்டி ஓடத் தொடங்குறவரை, இரவு முழுக்க, சுத்தித் திரிஞ் சோம். பிறகு நான் இன்ஸ்டிடியூட்டிற்கு நேரம் கழித்துப் போனேன்...

ஹெர்மன்: ஆனா நீ... நீ இன்ஸ்டிடியூட்டை விட்டு விட்டதற்காக வருத்தப்படலியா? இந்த வசந்த காலத்தில் நீ ஒரு மருத்துவராகி இருப்பாய். உன்னுடைய இறுதி வகுப்பை முடிக்க உனக்கு ஒரே ஓர் ஆண்டு தானே பாக்கி இருந்தது.

தான்யா: திரும்பவும் அதையே பேச வந்துட்டா யே! நீ அதை என்னிடம் குறிப்பிட்டிருக்கவே கூடாது... நான் உன்னைக் காதலிக்கிறேன், காதலிக்கிறதுன்னா ஒருத்தர் தன்னையே மறந்து விடுவதுன்னு பொருள், காதலிக்கும் ஒருத்தருக் காக மறக்கிறது. உன் அமைப்புப்படங்களைச்

செய்வதற்கு இரவு மாறி இரவு உட்கார்ந் திருக்க நான் தயாராக இருக்கேன், ஏன்னா உன் வேலை என்னுடையது ஆகிருச்சு, ஏன்னா நீ என்றால் நான்தான் என்று பொருள்.

ஹேர்மன்: ஆனா நீ எனது வாழ்க்கையாலே எப் பவும் வாழ முடியாதே. இது சலிப்பாயிருக்குது, இது உனக்குத் தெரியட்டும், தான்யா!

தான்யா: சலிப்பாயிருக்கிறதா? யாருக்கு?

*ஹேர்மன் விடையளிக்கவில்லை.*

இதோ, நாம் வாய்ச் சண்டைக்கு வந்துட் டோம்... அப்புறம் இது இப்படிப்பட்ட மாலை யில் நடந்தது!

*அமைதி.*

சற்று பொறு, பொறு. உன்னை விட்டு உடனே போறேன். ஒருபோதும் திரும்ப மாட்டேன். நீ மனங் கசந்து அழுவாயா?

ஹேர்மன்: ஆமாம்.

தான்யா: அப்படியா! (இடைவெளி.) என்கிட்டே மன்னிப்புக்கேள். திரும்பவும் என்னோட உணர்வு களைப் புண்படுத்தாதே, கேட்கிறாயா?

ஹேர்மன்: கேட்கிறேன்.

தான்யா: ஒருபோதும் என்னிடம் பொய் பேசா தே. என்ன நடந்தாலும் பரவாயில்லை, ஒருபோ தும் பொய் பேசாதே.

*ஹேர்மன் அவளை உணர்ச்சிவயப்பட முத்தமிடுகிறான்.*



2–1006

இது போல என்னை முத்தமிட வேணாம்!

ஹேர்மன்: ஏன்?

தான்யா (கூண்டைச் சுட்டிக்காட்டியபடி): செமி யோன் செமியோனவிச், எங்கள் குஞ்சுக்காக்கை கவனித்துக் கொண்டிருக்கிறது, அது மிகவும் சின்னது. (கிசுகிசுத்தபடி.) அதற்காகவும், நமக் காகவும் நாம் குடிப்போம்... அத்தோட நாம் விரும்புற ஒவ்வொன்னுக்காகவும்.

*அமைதி. அவர்கள் பேசிக்கொள்ளாதபடி நெருக்கமாக அமர்கிறார்கள்.*

ஹேர்மன்: ரொம்ப அமைதியா இருக்கு.

தான்யா: இந்த உலகம் பூராவும் யாருமே இல் லாதது போல இருக்கு.

ஹேர்மன்: நீயும் நானும் தான்.

தான்யா: நீயும் நானும், நாம இருவரும்.

ஹேர்மன்: நீயும் நானும், அத்தோட செமியோன் செமியோனவிச்சும்.

தான்யா: பனி பெய்துக்கிட்டிருக்கு. பனி விழுவ தைப் பாக்க விரும்புறாயா?

ஹேர்மன்: ஆமாம்.

தான்யா: அதிகமாகவா?

ஹேர்மன்: அதிகமாகத்தான்.

தான்யா: நானும் அப்படித்தான். பனி பெய்யட் டும்.

ஹேர்மன்: ஆம், அது பெய்யட்டும்.

*அமைதி.*

*தான்யா:* அது என்ன?

*ஹேர்மன்:* ஒரு கண்ணாடிக் குவளை உடைஞ்சு போச்சு.

*தான்யா (அமைதியாக):* இப்போ நாம பாத்திரங் களை உடைச்சுக் கிட்டிருக்கோமே. (இடை வெளி.) இப்போ எங்கோ வடக்கே பயங்கரமா இருக்கு. பனிப் புயல்... ஓநாய்கள்... கரடிகள்... நீ கரடிகளுக்குப் பயப்படுவாயா?

*ஹேர்மன்:* இல்லை.

*தான்யா:* சுத்தமாவேயா?

*ஹேர்மன்:* சுத்தமாவேதான்.

*தான்யா:* நானுங் கூடத்தான். அவை உயிர் வாழட்டும்.

*ஹேர்மன்:* ஆமாம், அவை இருக்கட்டும்.

*திடீரென்று கதவு மணி ஒலித்தல்.*

*தான்யா (கத்திக்கொண்டு):* தூஸ்யா, நாங்க உள் ளே இல்லை!

*ஹேர்மன்:* அவள் கதவைத் திறந்துட்டா...

*தான்யா:* இங்கே வந்துட்டாங்க...

*கதவில் ஒரு தட்டு.*

உள்ளே வாங்க.

*ஷமானவா கதவருகே தோன்றுகிறாள். முப்பது வயதுடைய பருமனான அழகான பெண். கருத்த பழுப்பு நிறம், பொன் வண்ணத் தலைமயிர், தாழ் வான தொனியில் குரல்.*

ஷமானவா: மன்னிக்கணும்... ஹேர்மன் நிக்கலாயெவிச் பலஷோவை நான் பார்க்கணும்.

தான்யா: அச்சோ, எல்லாநேரமும் ஒவ்வொருத்தரும் ஹேர்மன் நிக்கலாயெவிச்சை விரும்புறாங்க. அச்சோ, அச்சோ!

ஹேர்மன் (சற்று குழப்பமானபடி): நான் பலஷோவ்...

ஷமானவா: என் பெயர் ஷமானவா.

ஹேர்மன்: மரீயா?

ஷமானவா: சரி. (தான்யாவிடம்.) என் அன்பே, நீங்க ஏன் என்னை அம்மாதிரிப் பார்க்குறீங்க?

தான்யா: பத்திரிகையில் நீங்க சற்று நிமிர்ந்த மூக்குடையவளாகக் காணப்பட்டீங்க.. ஆனா இது தவறா அச்சாகி இருக்கு... உண்மையிலே, அது அருவருக்கத்தக்க தவறான அச்சு. இருந்தாலும், உங்களுக்குத் தெரியுமா... நிமிர்ந்த மூக்குடையவர்களுக்காக நாங்கள் இருவருமே டோஸ்ட் பிரரேபிச்சோம்.

ஹேர்மன் தான்யாவிற்குச் சமிஞ்ஞை காட்டுகிறான்.

நான் வெளியே போயிறவா?

இடைவெளி.

ஷமானவா (கூண்டில் உள்ள பறவையை முறுவலித்தபடி பார்த்துக்கொண்டு): எவ்வளவு வேடிக்கை! காக்கையை வீட்டிற்குள்ளே அடைச்சு வச்சதை இதற்கு முன்னே நான் ஒருபோதும் பார்த்ததில்லை.

தான்யா: அது எங்களுடைய குஞ்சுக்காக்கை செமியோன் செமியோனவிச்.

ஷமானவா: உண்மையில், அதை விடுவித்திருந்தால் நல்லாயிருக்கும். இது போல புழுக்கமான அறையில் ஒரு பறவையை அடைத்து வைப்பது சரிதானா?

தான்யா: என்ன இது! நாங்க அதைப் பார்த்த போது அது மிகச் சிறிசு. இந்த அளவு. (அதன் அளவைக் காட்டுகிறாள்.) மேலும் அதனால் பறக்க முடியாது.

ஷமானவா: எப்படியிருந்தாலும், எப்படி பறப்பது என்பதை அது அறைக்குள்ளாக அறிந்து கொள்ளப் போவதில்லை.

இடைவெளி.

தான்யா: உங்களிடம் காலணி மேலுறைகள் இல்லையா? ஐயோ, நீங்க தரையை எப்படிக் குழுப்பி இருக்கீங்கன்னு பாருங்க!

ஹேர்மன் (கதவுக்குச் சென்றபடி): நாம் அடுத்த அறைக்குப் போகலாம், அங்கே இன்னும் வசதியா இருக்கும்.

ஷமானவா (ஹேர்மனைப் பின்தொடர்ந்து சென்றபடி): கோபித்துக்கொள்ளாதீங்க, உங்க கணவரை நான்... (தனது கடிகாரத்தைப் பார்க்கிறாள்.) சரி, பதினைந்து நிமிடத்திற்கு மேல் நிறுத்தி வைக்க மாட்டேன்.

அவர்கள் வெளியே போகிறார்கள்.

தான்யா: நான் பணிவா தரையை வணங்குறேன்.

(பறவைக் கூண்டிற்குச் செல்கிறாள்.) இவை எல்லாத்தையும் நீ கேட்டாயா, செமியோன் செமியோனவிச்? உண்மையிலேயே! (அறையின் மேலுங் கீழும் நடக்கிறாள். பியானோவுக்குச் செல்கிறாள். சில சுரங்கள் வாசிக்கிறாள். தனது குரலில் ஏதோ ஒரு சவாலுடன்.) ஹேர்மன், நான் உங்களைத் தொந்தரவு செய்யவில்லையா?

ஹேர்மன் (அடுத்த அறையிலிருந்து): துளி கூட இல்லை, அன்பே...

தான்யா (மெதுவாகப் பியானோவை வாசித்துக் கொண்டே பீத்தோவனின் 'ஸ்காட்லாந்து பாடலை'ப் பாடுகிறாள்):

''எத்தனை அருமை! என்னரும் ஜெம்மி
அத்தனை அன்புடன் அவரும் எண்ணி!
பாசமோ கோடி பாவையை நாடி!
நேசமாய் நாளும் வருவார் தேடி!

பெண்மனம் அறியாப் பேதையா அவரும்
புண்பட மனதும் புரிந்தார் தவறும்!
நாளும் ஏங்கியே நானும் தவித்தேன்
பாழும் நினைவைப் பிரியத் துடித்தேன்!''

கதவு மணி ஒலிக்கிறது. முன்னறையிலிருந்து மகிழ்ச்சி மிக்க குரல்கள் கேட்கின்றன. தூஸ்யா வேகமாக நுழைகிறாள்.

தூஸ்யா (மறைக்க முடியாத மகிழ்ச்சியுடன்): தத்யானா அலெக்சேயெவ்னா, உங்க நண்பர்கள் — மருத்துவக் கல்லூரி மாணவர்கள் வந்தாங்க.

தான்யா (மகிழ்ச்சியோடு): உண்மையாகத்தானா? அவர்களை உள்ளே அனுப்பு, தூஸ்யா! தேநீர் தயார் செய். என்ன, ஹேர்மன் நிக்கலாயெவிச், பாத்தீங்களா? எனக்குக்கூட விருந்தினர்கள் வரப் போறாங்க! என்னடா, சீக்கிரம் போ, தூஸ்யா!

தூஸ்யா: நான் ஓடிக்கிட்டிக்கேன், தத்யானா அலெக்சேயெவ்னா. (கதவை நோக்கிச் செல்கிறாள்.)

தான்யா: இல்லை! பொறு... (சிந்தனை வயப்பட்டபடி.) ஒருவேளை நான் அவர்களைப் பார்க்கக் கூடாது? அவங்க என்னை வருத்தப்படுத்துவாங்க. திரும்பவும் இன்ஸ்டிடியூட்டிற்குப் போகுமாறு என்னை வலியுறுத்துவாங்க. அவங்களை நான் பார்க்கக் கூடாது, என்னமோ, தூஸ்யா?

தூஸ்யா: எனக்குத் தெரியாது, தத்யானா அலெக்சேயெவ்னா.

தான்யா (குறுகிய அமைதிக்குப் பிறகு): அவர்களிடம் சொல்லு... நான் வீட்டில் இல்லைன்னு அவர்களிடம் சொல்லு. நான் என் கணவரோடு அரங்கத்திற்குப் போய் இருக்கேன்னு. ஆமாம், அது தான் — அரங்கத்திற்கு!

தூஸ்யா: உங்க விருப்பப்படி சொல்வேன், தத்யானா அலெக்செயேவ்னா. (வெளியேறுகிறாள்.)

தான்யா கதவுக்கு ஓடி, முன்னறையில் என்ன நடைபெற்றுக் கொண்டிருக்கிறது என்பதைக் கேட்கிறாள். மகிழ்ச்சிகரமான இரைச்சல் படிப்படியாகக் குறைந்து போகிறது. மன்னிப்புக் கேட்கிற குரல்கள் கேட்கின்றன, பிறகு முன் கதவு பேரொலியுடன் அடிபடுகிறது. அமைதி நிலவுகிறது.

தூஸ்யா (திரும்பவும் நுழைந்தபடி): அவுங்க போயிட்டாங்க. உங்களோட குரேவிச் ரொம்ப ஏமாந்து போனார். ஜேன்யாவுக்கு ஈற்றுக்கட்டி இருக்கிறது. இரயிலில் காற்றுவீச்சு பலமா இருந்ததுன்னு அவள் சொல்றாள்.

தான்யா: அது பற்றிப் பரவாயில்லை.

தூஸ்யா: அவள் உங்களுக்கு ஒரு குறிப்பு எழுதினாள். இதோ. (அதை அவளிடம் கொடுத்து வெளியேறுகிறாள்.)

தான்யா (குறிப்பை உரக்கப் படிக்கிறாள்): ''பொய் பேச வேண்டிய அவசியமில்லை, தான்யா, — நீ பாடிக்கொண்டிருப்பதை நாங்கள் கேட்டோம். எல்லாம் தெளிவாகவே இருக்கிறது: உனது வாழ்க்கையில் நாங்கள் தேவையில்லை... திரும்பவும் உன்னைப் பார்ப்பதற்காக நாங்கள் வரமாட்டோம். நீ மகிழ்ச்சி பெற வாழ்த்துகிறேன். ஜேன்யா.'' (சற்று நேரத்திற்கு எதுவுமே பேசிக்கொள்ளாமல், ஏதோ சிந்தனையில் ஆழ்ந்தது போல, அவள் நிற்கிறாள்.) ஊம், என்ன செய்யணும்?.. அப்படியே அது போகட்டும்.

ஹேர்மனும் ஷமானவாவும் கதவு வழியில் தோன்றுகிறார்கள்.

ஷமானவா: ஐந்து மாதங்களுக்குப் பின் நான் மாஸ்கோவில் இருப்பேன். ஏப்ரல் கடைசியில். மக்கள் கமிஸார் குழு அதற்குள்ளாக உங்களது காரியத்தில் ஒரு முடிவை எடுத்துவிடும். அதோடு, அமைப்புப்படங்கள் மிக நல்ல முறையில்

செய்யப்பட்டிருக்கின்றன. அவற்றை வரைந்தது யார்?

3ஹ ர் ம ன் (தான்யாவைச் சுட்டிக்காட்டி): இவள் தான்.

ஷ ம ா ன வ ா: ஆக, நீங்க அமைப்புப்படம் வரையும் ஒரு பெண், அன்பே?

த ா ன் ய ா: அவருக்கு மட்டுமே நான் அமைப்புப் படங்கள் வரைகிறேன். அது எனக்கு மகிழ்ச்சி யைத் தருது.

*சங்கடமான அமைதி.*

ஷ ம ா ன வ ா: ஒருவேளை, உங்களுக்கு ஒரு குழந் தை இருக்கு?

த ா ன் ய ா: ஆமாம்.

ஷ ம ா ன வ ா: பெரியதாகவா?

த ா ன் ய ா (ஹேர்மனைச் சுட்டிக்காட்டி): நீங்கள் பார்ப்பது போல.

ஷ ம ா ன வ ா: உங்களுக்கு நகைச்சுவை உணர்வு இருக்கு, நான் கவனிச்சேன். (ஹேர்மனிடம்.) ஆகவே, சோதனைகள் வெற்றிகரமா அமைந்து விட்டால், நீங்க எங்களிடம் வரவேண்டி இருக் கும்... நீங்க எப்பொழுதேனும் சைபீரியா சென்ற துண்டா?

ஹே ர் ம ன்: இர்க்கூட்ஸ்கைத் தாண்டி அப்பால் செல்ல எனக்கு எந்தக் காரணமும் ஏற்படலே. ஆனா மேற்கு சைபீரியா எனக்கு நல்லாத் தெரியும். ஏன்னா என் அப்பா ஒரு பரம்பரை சைபீரிய என்ஜினியர். அங்கு செல்வதற்கு நான் மகிழ்ச்சி அடைவேன். மொத்தத்தில், பயிற்சி

யினால் நான் ஓர் என்ஜினியர் புவியியலாளர். அமைப்பாளரின் வேலையோ... இது வெறுமனே ஓர் அதிருஷ்டமான எண்ணம்!

ஷமானவா (வெளியே போய்க்கொண்டு): ஓ, நல்லது. இது பற்றி நாம் வசந்த காலத்தில் பேசுவோம். (தான்யாவிடம்.) போய்வருகிறேன், என் அன்பே. (வெளியேறுகிறாள்.)

ஹேர்மன் (அவள் வெளியேறுவதையே பார்த்துக் கொண்டிருக்கிறான்): அவள் எப்படிப்பட்டவள்... (சரியான வார்த்தையைச் சொல்லி அவன் முடிக்கவில்லை.) இல்லையா?

தான்யா: இங்கு எதற்காக அவள் வந்தாள்?

ஹேர்மன்: பார், குழுவில் எனது திட்டத்தைப் பற்றி அவர்கள் விவாதம் செய்திருக்காங்க. வந்து... சோதனைகள் வெற்றியடையுமேயானால்...

தான்யா (கிளர்ச்சியோடு): மேலே சொல்லு!

ஹேர்மன்: என்னுடைய தங்கத் தூர்வாரியானது ஷமானவாவின் தங்கச் சுரங்கத்தில் மாதிரிக்காகப் பொருத்தப்படும்.

தான்யா: ஹேர்மன்!.. (மகிழ்ச்சியோடு.) ஹேர்மன், பார்க்கிறாயா?! எனக்குத் தெரிந்தது... நான் உனக்குச் சொல்லிக்கிட்டே இருக்கேன்... நீ மிக மிக அசாதாரணமான திறமை வாய்ந்தவன்!

ஹேர்மன்: சோதனைகள் மட்டுமே... அது பற்றி நினைக்கவே நான் அஞ்சுகிறேன்.

தான்யா: பிறகு நினைக்கவே வேணாம், அன்பே... எல்லாமே நல்லபடியாக நடக்கப் போகுது.

ஹேர்மன்: ஆமாம்! நாம் எங்காவது போய்

வரலாம்... இன்றைக்கு நம்முடைய மாலை நேரத்தைச் சேர்ந்தே செலவழிப்போம்.

தான்யா: அரங்கத்திற்கு!

ஹேர்மன்: சர்க்கஸ் பார்க்கத்தான் எனக்கு மிகப் பெரிய ஆசை.

தான்யா: இல்லை! (கம்பீரமாக.) நாம் அரங்கத்திற்கு சேர்ந்தே போவோம். (பத்திரிகையை உற்றுப் பார்க்கிறாள்.) இன்று பல்ஷோய் அரங்கத்தில் 'எவ்கேனி ஒனேகின்' என்ற ஆபெரா. ஹேர்மன், அன்பே, நாம் சீட்டுகள் வாங்க முயற்சி செய்வோம்! நான் 'ஒனேகின்' ரொம்ப விரும்புறேன். எனக்காகப் பொறு, இதோ நொடியிலே உடைமாத்திக்கிட்டு வந்துறேன். (அடுத்த அறைக்குள்ளாக ஓடுகிறாள்.)

தொலைபேசி மணி ஒலிக்கிறது.

ஹேர்மன் (ரிஸீவரைத் தூக்குகிறான்): ஆமாம்... யாரது?.. கிண்டல் செய்யுறதை நிறுத்தவும். (சிரிக்கிறான்.) யார்?.. என்னால் புரிஞ்சுக்க முடியலே... (உரக்கக் கத்துகிறான்.) மிஹேய்! நீயா அது? எங்கேயிருந்து வந்துருக்கே?.. அல்டனிலிருந்தா?* ஸெர்யோழ்கா உன்னோடா இருக்கிறான்? (சிரிக்கிறான், நீண்ட நேரம் கேட்கிறான், திரும்பவும் சிரிக்கிறான்.) ஓர் ஆண்டு முழுதுமே நாங்க ஒருத்தரை ஒருத்தர் பார்த்துக்கிலே... இல்லை, இன்னைக்கு அதிக வேலை

---

* **அல்டன் —** கிழக்கு சைபீரியாவிலுள்ள ஒரு நதி. அதனுடைய பெயர் தங்கச் சுரங்கம் உள்ள பகுதிக்குத் தரப்பட்டுள்ளது. (ப-ர்.)

இருக்கு... என்ன? நாளைக்கு நீங்க புறப்படப் போகிறீங்களா? என் மனைவியோடு நான் வருவேன் என்றால்?.. ஆனா ஏன், மிஹேறய்?.. ஆமாம், ஆமாம், நிச்சயமா, நான் புரிஞ்சுக்கிட்டேன் – நண்பர்களுக்கு இடையிலான ஒரு சந்திப்பு... இல்லை, நாளைக்குங் கூட நான் வேலையா இருப்பேன்... (இடைவெளி.) பிறகு சரி. நான் நட்புக்காக எல்லாத்தையும் செய்கிறேன். பொறு, இதோ இப்போ வருவேன். (ரிஸீவரை வைக்கிறான்.)

ஒரு புதிய, பகட்டான உடையணிந்தபடி தான்யா உள்ளே ஓடி வருகிறாள்.

தான்யா: என் அன்பே... இன்று நம்மோட நாள், நானோ மிகவும் சுயநலக்காரியா இருக்கேன், இல்லையா? நீ சர்க்கஸுக்குப் போக விரும்புகிறாய். சரி, அப்ப நாம் போகலாம். அங்கே வேடிக்கையான கோமாளிகளும், பயிற்றுவிக்கப்பட்ட விலங்குகளும் இருக்கும். நீயாகவே மகிழ்ச்சியடைய முடியும். நாம் போகலாம்! சர்க்கஸுக்கு நாம் போகலாம், அன்பரே.

ஹேர்மன்: உனக்குத் தெரியுமே, கொஞ்சம் முன்னாலே ஒரு தொலைபேசி அழைப்பு வந்துச்சு... மொத்தத்தில் மாலை நேரத்தை நாம் இரண்டு பேருமாகச் சேர்ந்து கழிக்க முடியாது.

இடைவெளி.

தான்யா (மெதுவாக): நமது தங்கத் தூர்வாரியில் சம்பந்தப்பட்டிருக்குதா?

ஹேர்மன் (கணநேர அமைதிக்குப் பிறகு): மொத்தத்திலே ஆமாம்!

இடைவெளி.

தான்யா: பிறகு என்ன, சரி, நீ போகலாம். உனக்கு நம்முடைய அமைப்புப்படங்களை நான் எடுத்துக்கிட்டு வரணும்னு விரும்புறாயா?

ஹேர்மன் (சற்று சிந்தனைக்குப் பிறகு): இல்லை, அவை தேவைப்படாதுன்னு நினைக்கிறேன்.

தான்யா: சீக்கிரமா திரும்பி வருவாயா?

ஹேர்மன்: எனக்குத் தெரியாது... (வேகமாக.) சந்தேகந்தான்.

சங்கடமான அமைதி.

நீ வீட்டில் இருப்பாயா?

தான்யா: வேறு எங்கே நான் போக முடியும்?

இடைவெளி.

ஹேர்மன்: உனக்கு நண்பர்கள் யாருமில்லாதது வருந்தமாயிருக்கு...

தான்யா: நீ அப்படி நினைக்கிறாயா?

ஹேர்மன்: நீ மறுபடியும் இன்ஸ்டிடியூட்டில் கற்றுக் கொள்ள விரும்பவில்லை என்றால், பிறகு...

தான்யா: பிறகு என்ன?

ஹேர்மன்: என்னங்கிறது உனக்குத் தெரியுமா? (முறுவலிக்கிறான்.) நாம் நம்ம குழந்தைக்கு யூரி என்ற பெயரிடுவோம்.

தான்யா: இல்லை, ஹேர்மன், இல்லை! நீயும் நானும் மட்டுந்தான். இல்லைன்னா நாம் மூனு

பேராகிருவோம். நீ அவனை நேசிப்பாய், ஆனா உன் அன்பை வேறு யாருடனும் பங்கு போடு றதை நான் விரும்பலே. அவனோடு கூடத்தான்.

ஹேர்மன்: உனக்குத் தெரியுமே, நான் தங்கு வேன்னு நினைக்கிறேன்... நான்... நான் எங்கு மே போகப் போறதில்லை.

தான்யா (அவனை நோக்கித் தாவிக்குதிக்கிறாள்): என் அன்பே! (இடைவெளி.) இல்லை, இல்லை, நீ போகணும், ஹேர்மன்... (அவனது மேலங்கி யையும், கழுத்துக்குட்டையையும் போடுகிறாள்.) சீக்கிரமா திரும்பு, உனக்காக நான் காத்துக் கிட்டிருப்பேன்... செமியோன் செமியோனவிச் சுடன்! இப்ப போ! (அவனை வெளியே தள்ளு கிறாள்.) போ, ஹேர்மன்!

*கதவு மூடும் ஓசை கேட்கிறது. குறிக்கோளின்றி தான் யா மேலுங்கீழும் நடை போடுகிறாள். விளக்கை அணைத்து விட்டு சோபாவில் சாய்கிறாள்.*

தூஸ்யா (முன்னறையிலிருந்து கதவைப் பாதி திறந்தபடி அரையிருட்டில் வாயிற்படியில் நின்று கொண்டிருக்கிறாள்): தத்யானா அலெக்சேயெவ் னா!

தான்யா: என்ன, தூஸ்யா?

தூஸ்யா: நமது பக்கத்து வீட்டுக்காரரோட குழந் தை இறந்து போச்சு...

*அமைதி.*

தான்யா: அது பையனா?

தூஸ்யா: பெண் குழந்தை. (இடைவெளி.) தத்

*யானா அலெக்ஸேயெவ்னா, நீங்க வீட்லே இருப் பீங்களா?*

தான்யா: *ஆம்.*

தூஸ்யா: *என் சகோதரனோட நான் படத்துக்குப் போகலாமா?*

தான்யா: *உண்மையாவே நீ போகலாம், தூஸ்யா.*

*தூஸ்யா வெளியே போகிறாள். தான்யா வானொலியைப் போடுகிறாள். 'எவ்கேனி ஒனேகின்' தொடக்க இசை கேட்கப்படுகிறது. தான்யா அமைதியாகக் கேட்கிறாள், பிறகு குதித்து எழுந்து விளக்கைப் போடுகிறாள். ஆடை அலமாரியின் மேலிருந்து அமைப்புப் படங்களை எடுத்து அவற்றை மேசையின் மீது வைக்கிறாள்.*

*இந்த அமைப்புப்படம் கொஞ்சம் அழுக்கா இருக்கு. புதுசா ஒன்னைச் செய்வோம்! (குஞ்சுக் காக்கையிடம்.) மாலை நேரம் போயிரும், ஹேர்மன் திரும்பிவருவான், அமைப்புப்படமோ தயாராகி விடும்! வேலை செய்ய, செமியோன் செமியோனவிச், வேலை செய்ய! (முறுவலிக்கிறாள், படத்திற்கு மேலாகக் குனிகிறாள்.)*

## காட்சி இரண்டு

*மே ஒன்று, 1935.*

*அதே அறை. வெளியே வசந்தகாலம். அகலத் திறந்த சன்னல் வழியாக மாஸ்கோ ஒளி அலங்காரம் செய்திருப்பதைக் காண முடியும். ஹேர்மனிடம் ஒரு*

மாலை நிகழ்ச்சி. இங்கு இருப்பவர்களில் தான்யா, ஷமானவா மற்றும் ஹோர்மனின் நண்பர்களாகிய இளம் மண்ணியல் ஆராய்ச்சியாளர்கள். இரைச்சல், யாரோ பியானோ வாசித்துக் கொண்டிருக் கிறான். மூலையில் மூன்று நரம்புகள் கொண்ட ருஷ்ய இசைக் கருவியான பலலாய்கா இசைத்துக் கொண் டிருக்கிறது. கொழுத்த, பலமான, முரட்டுத் தாடி வைத்த இளைஞனான மிஹேய் தனது கண்ணாடிக் குவளையை மேலே உயர்த்தியபடி, அமைதியை ஏற்படுத் தும் பொருட்டு வீணாக முயற்சித்துக் கொண்டிருக் கிறான்.

மிஹேய்: நண்பர்களே... நண்பர்களே, ஒன்றை நான் கட்டாயம் சொல்லியாகணும்...

குரல்கள்: மிஹேய் மறுபடியும் எதையோ கட் டாயம் சொல்ல வேணுமாம்!

— அவனைப் போகச் சொல்லுங்க!

— அமைதி!.. அவனைப் பேச விடுங்க!

— சொல், மிஹேய்!

மிஹேய் (ஆடம்பரமாக): சகோதர மண்ணியல் நிபுணர்களே! தளர்ச்சியுறாத ஆர்வலர்களே! முப் பதுகளின் மக்களே! மண்ணியல் கல்லூரியின் சக்தி மிக்க கொத்தளங்களே, இப்போதைய மண்ணிய லாளர்களே, என்ஜினியர்களே! மூன்று ஆண்டு களுக்கு முன்னால் நாம் கல்லூரிக்குப் பிரியா விடை கொடுத்தோம், நாம் ஒருவருக்கொருவர் பிரியாவிடை கொடுத்துக்கொண்டோம். நமது கல்வியால் அறிவு பெற்று, பூமியின் ஆழங்களைக் காண வேண்டும் என்ற வேட்கையால் ஆட்டிப் படைக்கப்பட்டு நமது மாபெரும் நாடோடிப் பயணத்தைத் தொடங்கினோம். மூன்று ஆண்டு

கள் கடந்துவிட்டன. மே தினமாகிய இன்று, நமது இனத்தின் வீரனை — ஹோர்மன் பலஷோவை வரவேற்பதற்காக இங்கே ஒன்று சேர்ந்திருக்கிறோம்!

குரல்கள்: ஹோர்மன், எழுந்து நில்! மக்களுக்கு முன்னால் வந்து நில்லு.

ஹோர்மன் எழுந்து நிற்கிறான்.

மிஹேய்: மூன்று நாட்களுக்கு முன்னால் இவரது மின் தங்கத் தூர்வாரி எந்திரத்தின் இறுதிச் சோதனைகள் முடிவுற்றன, நாமெல்லாம் வெற்றிப் பெருமிதம் கொண்டோம். இங்கே நமக்கு முன்னால் அவர் நிற்கிறார், நமது மரியாதைக்குரிய நண்பர், அமைப்பாளர். அவரது திறமைக்காகவும், நமது கல்லூரிக்காகவும், நமது அன்புக்குரிய டீனுக்காகவும் இதைப் பருகுவோம். உர்ரா!

கண்ணாடிக் குவளைகள் மோதப்படும் ஓசை கேட்கிறது. பியானோவும், பலலாய்காவும் அணிநடை இசையைப் பாடுகின்றன.

குரல்கள்: அருமை மிஹேய்! ஆக, அவர்கள் அல்டன் பகுதியில் பேசிக்கொள்ள முடியுமே!..

மிஹேய்: ஆமாம், அல்டன் பகுதியிலும் அவர்களால் தங்களது திட்டத்தை நிறைவேற்ற முடியும் — கஸாக்ஸ்தானிலிருந்து வந்த சில வகுப்பினரைப் போல அல்ல.

அட்டகாசம்.

குரல்கள்: என்ன, யாஷா, உனக்குக் குறிப்புக் கிடைத்ததா?

— மிஹேய், அவர்களுக்கு நேரே சொல்லு!

— பலே தாடிக்காரனே!

ஹேர்மன்: தயவு செய்து கவனியுங்க! (எழுந்து நிற்கிறான்.) எனது வேலையில் உதவி செய்த ஒருத்திக்காக இந்த டோஸ்டை நான் முன்மொழிகிறேன். எனது வெற்றிக்காக அவளுக்குப் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறேன்... மரீயா தனாதொவ்னாவுக்காக!

மிஹேய்: புத்திசாலித்தனமான பேச்சுக்களைக் கேட்பதற்கு மகிழ்ச்சியாக இருக்கிறது! (ஷமானவாவிடம்) நான் உங்களுக்காகப் பருகுகிறேன், என் அன்பே.

எல்லாக் கண்ணாடிக் குவளைகளும் மோதப்படும் ஓசை கேட்கிறது, வாழ்த்துகள். தான்யா மேசையை விட்டு தனது குஞ்சு அண்டங்காக்காய்க் கூண்டிற்குச் செல்கிறாள்.

(ஹேர்மனிடம்.) ஏதோ உணர்ச்சியோடு கூறுகிறாய், சனியன். (சிரிக்கிறான்.) இல்லை, இங்கே ஏதோ ரகசியம். (தான்யாவிடம்.) உங்கள் இடத்தில் நான் இருந்தேன் என்றால் அதில் கவனம் செலுத்துவேன், விருந்தளிப்பவளே. ஏ?.. (சிரிக்கிறான்.) என் தாடியால் நான் ஆணையிடுகிறேன்...

சற்று இடைவெளி.

ஷமானவா: அதோடு, மிஹேய், எப்படி அளவுக்கு

மீறி கொழுகொழுன்னு உங்களால் தாடி வளர்க்க முடிந்தது?

மிஹேய்: ஆ, மரீயா தனாதொவ்னா, ஒருவரால் என்ன முடியுமோ அதை எப்பொழுதுமே அவரால் சாதிக்க முடியும்.

ஷமானவா: உறுதியாத்தானா?

மிஹேய்: அதுவே எல்லாம் அல்ல. ஒருவரால் என்ன முடியுமோ என்பது மட்டுமல்ல, ஆனால் ஒருத்தர் என்ன சாதிக்க விரும்புகிறார் என்பதும்... இது மிக முக்கியமானது. என்னம்மா, என்னை மணந்து கொள்வியா?

ஷமானவா: ஓகோ! இது போன்ற விஷயங்களில் நீங்கள் நினைக்காமல் நடந்துகொள்றதை என்னால் பார்க்க முடியுது...

மிஹேய்: வாழ்க்கை எனக்குக் கற்றுக்கொடுத்தது, மரீயா தனாதொவ்னா.

ஷமானவா (சிரித்துக் கொள்கிறாள்): நீங்கள் முழுக்கவனிப்பாரற்ற மனிதன், மிஹேய்.

மிஹேய்: நான் கவனிப்பாராற்றவன் என்றால் அருமையான விஷயந்தான். யாராவது என்னைக் கவனிக்க விரும்புவாங்க என்பதே அதன் பொருள்.

ஹேர்மன் பறவைக் கூண்டோடு சள்ளை பிடித்த வேலை செய்கிற தான்யாவிடம் செல்கிறான்.

ஹேர்மன்: சரி, கூண்டை என்னிடம் தா.

தான்யா: செமியோனுக்காக நீ வருத்தப் படலியா?

ஹேர்மன்: உண்மையில் நான் வருத்தப்படுறேன், ஆனா நாம முடிவு செய்துட்டோம்.

*தான்யா(உரக்க):* கவனியுங்கள்! ஒவ்வொருத்தரும், ஒவ்வொருத்தரும், ஒவ்வொருத்தரும்! *(கூண்டை மேலே தூக்குகிறாள்.)* உங்களுக்கு முன்னாலே நீங்க செமியோன் செமியோனவிச்சைப் பார்க்கிறீங்க. குளிர்காலம் முழுக்க அது எங்களோட நண்பனா இருந்தது. மே தினத்தில் அதைச் சுதந்திரமாக விட்டுவிடுவதுன்னு ஹேர்மனும் நானும் முடிவு செய்திருக்கோம். அந்த நாள் இப்ப வந்திருக்கு. இதற்கு மரபுப்படி வழியனுப்பு விழாவை நாம் நடத்தலாம்னு நினைக்கிறேன்.

*பியானோவில் யாரோ அணிநடை இசைப் பாடலை இசைக்கிறார்கள். எல்லாரும் கூண்டை நோக்கி நகர்ந்தார்கள்.*

*மிஹேய் (பாடுகிறான்):*

''கடவுளரின் சொந்தப் புள்ளுக்கு
வேதனை தெரியாது, வேலையும் புரியாது.''

*எல்லாரும் (சேர்ந்து கொள்கிறார்கள்):*

''நீடிச்சு நிலைச்சிருக்கும்
கூட்டைக் கட்டவும் அறியாது...''

*தான்யா (கம்பீரமாக):* மதிப்புக்குரிய செமியோன் செமியோனவிச்! பிரிகின்ற துயர்மிகு நேரம் வந்து விட்டது. நீ வளர்ந்திருக்கிறாய், பலம் பெற்றிருக்கிறாய், மெலிந்த சிறிய குஞ்சு அண்டங்காக்கையாக இருந்த நீ வளமான, சக்தி மிக்க பெரிய அண்டங்காக்கையாக மாறியிருக்

கிறாய். இன்று, மே தினத்தில், நீ பறந்து திரிவதற்காக உன்னை விடுதலை செய்கிறோம், வாழ்க்கையில் சுலபமான, மகிழ்ச்சி மிக்க சாலை வழியாக நீ செல்ல வேண்டுமென்று விரும்பு கிறோம். (பறவையிடம் குனிந்து.) போய் வருக, செமியோன், எங்களைப் பற்றி மோசமாக நினை யாதே.

*அணிநடை இசைப் பாடல் முழங்குகிறது. எல்லாக் கூட்டமும் கூண்டைச் சுற்றி நின்று குனிந்து பற வைக்கு பிரியாவிடை தருகிறார்கள்.*

குரல்கள்: அதன் காலுக்குக் கைகொடுங்கள்! — எல்லாரும் ஒரே சமயத்தில் வேணாம் — ஒருத்தர் பின் ஒருத்தரா!

ஹேர்மன்: அமைதி... கதவைத் திற... இப்ப இது போகட்டும்.

தான்யா: போய் வா, செமியோன் செமியோ னவிச்!

ஹேர்மன்: அது பறந்துபோச்சு.

தான்யா: பலகணிச் சட்டத்தில் தங்கி விட்டது...

ஹேர்மன்: சைத்தானே, அது பறக்க விரும்பலே...

தான்யா: பிறகு என்ன செய்றது?

மிஹேய் (கத்துகிறான்): போ, போ, செமியோன் செமியோனவிச்!

தான்யா: கத்த வேணாம், அது திரும்பி வரு கிறது!

*எல்லாரும் சன்னலருகே நின்று கத்திக்கொண்டும் தங் களது கைகளை அலைத்துக்கொண்டும் இருக்கிறார்கள். தான்யா ஒரு துவாலையை ஆட்டுகிறாள்.*

மிஹேய்: ஆகா!.. அது பயந்து போயிருச்சு... அது திரும்பிருச்சு.

தான்யா: அது அகல் பெருஞ்சாலை நோக்கிப் பறந்துருச்சு...

தெருவிலிருந்து இசை வருகிறது.

குரல்கள்: எங்கே? நான் அதைப் பார்க்க முடியலே.
— அதோ அங்கே, அந்த வீட்டிற்குப் பின்னாலே...
— இல்லை!

தான்யா: அது பறந்து போயிருச்சு. (காலிக் கூண்டைப் பார்க்கிறாள்.) நம்மோட மிக மகிழ்ச்சியான நாட்களுக்கு அது சாட்சியாக இருந்துச்சு... உனக்கு நினைவிருக்கா, ஹேர்மன்? தூங்காத இரவுகள், மசாலை இறைச்சி வைத்த ரொட்டிகள், அமைப்புப்படங்கள், எங்கள் நம்பிக்கைகள்! (மெதுவாக.) இப்போது அவை உண்மையாகி விட்டன.

ஷமானவா: பிறகு ஏன் இப்படித் துக்கமா சொல்றீங்க, தான்யா?

தான்யா: கனவுகள் மெய்யாகிறபோது எப்பவுமே ஒரளவு துக்கமா இருக்கத்தான் செய்யும்.

ஹேர்மன்: என்னோட தங்கத் தூர்வாரி எந்திரம் எல்லாச் சோதனைகளையும் கடந்துருச்சு. நான் அழணும்னு நீ விரும்புறியா?

தான்யா: நீ திரும்பவும் என்னைத் தவறாகப் புரிஞ்சுக் கிட்டாய்... அதோடு என்ன?

யாரோ ஒரு கீழ்க்குரல் தந்தியை பலமாக மீட்டினார்.

ஹெர்மன் (ஷமானவாவிடம்): உங்களுக்குத் தேநீர் ஊத்துவேன். (மேசைக்குச் செல்கிறான்.)

மிஹேய் (கித்தார் வாத்தியத்துடன்): வாங்க, சகோதரர்களே, நமது சைபீரியப் பாடலைப் பாடலாம்...

*ஓர் இழுவையான சைபீரியப் பாடலை ஆண்களின் குரல்கள் மெதுவாகப் பாடுகின்றன. தனது கித்தாரோடு மிஹேய் அவர்களோடு சேர்ந்துகொள்கிறான். ஷமானவா தான்யாவிடம் சென்று அவளது தோளில் தனது கையைப் போடுகிறாள். தான்யா அவளைப் பார்க்கிறாள். சிறிது நேரம் அவர்கள் எதுவும் பேசவில்லை.*

ஷமானவா: தான்யா... சொல்லுங்களேன், என்ன தவறு நடந்துச்சு?

*தான்யா பதில் பேசவில்லை.*

எதுபத்தியோ உங்களிடம் ஏனோ கவலையும், எச்சரிக்கையும்... நீங்க ஏதோ பயந்து நடுங்குறது போல...

தான்யா: நான் எதைப் பத்தியும் பயப்படலே.

ஷமானவா: இருபதில் — மொத்தத்தில், அப்ப நான் எப்படி இருந்தேன்னு எண்ணிப்பாக்கிறேன் — ஒருத்தர் எல்லாவகையான கனவுகளையும் தன் நெஞ்சில் வைச்சிருப்பார். மகிழ்ச்சியான திட்டங்கள், நம்பிக்கைகள், பல விருப்பங்கள். நான் சரிதானா?

தான்யா: இருக்கலாம்.

ஷமானவா: ஆனா, உங்களது விருப்பங்களை என்னால் புரிஞ்சுக்கிற முடியலே. (மெதுவாக.) நான் உங்களை விட அதிகம் வயசானவள், மேலும்... என்னைப் புரிஞ்சிக்கிட்டீங்க, ஒருத்தர் அலட்சியமா இருக்க வேண்டியதில்லை... தனக்குத்தானே கூடத்தான்.

தான்யா (கண்டிப்புடன்): இது உண்மைதானா?

ஷமானவா: நான் நாளை புறப்படப் போறேன். நிரந்தரமாக. பெரும்பாலும் நாம் ஒருத்தரை ஒருத்தர் திரும்பவும் பார்த்துக்கொள்ள மாட்டோம்... நாம் இது மாதிரி பிரிவதை நான் விரும்பலே..,

தான்யா: நீங்க போயிருவீங்க, நாங்கள் உங்களை மறந்துறுவோம்... நானும் செமியோன் செமியோனவிச்சும். (காலிக் கூண்டைப் பார்க்கிறாள்.) ஓ... ஆம்... (இடைவெளி.) பிறகு, நாளைக்கா?

ஷமானவா: நீங்களோ ஒரு விநோதமான பெண், தத்யானா, எதையோ இழந்துட்டதைப் போல இருக்கீங்க.

தான்யா: ஆமாம். ஒரு முட்டாள் என்ன இழந்தானோ அதை ஒரு நூறு புத்திசாலி ஆட்கள் ஒரு போதும் கண்டுபிடிக்க முடியாது. (இடைவெளி.) மேசைக்குப் போங்க. ஹேர்மன் உங்களுக்குத் தேநீர் ஊற்றிவைத்திருக்கிறான். (ஒரு பக்கமாக நகர்கிறாள்.)

ஷமானவா தனது கடிகாரத்தைப் பார்க்கிறாள்.

மிஹேய்: செமியோன் செமியோனவிச்சுக்காகவும் அதனுடைய பயணத்திற்காகவும்! என்ன, விருந்த

ளிப்பவளே, நீங்க ஏன் குடிக்கவே மாட்டேங்கிறீங்க?

ஹெர்மன்: அவளைத் தனிமையில் விடு... அவள் பிணங்கிக்கிட்டிருக்கிறாள், ஏன்னு — கடவுளுக்குத் தான் தெரியும்.

மிஹேய்: இல்லை, நான் அவளைத் தனிமையில் விட மாட்டேன்! (தான்யாவைப் பியானோவுக்கு அழைத்துச்செல்கிறான்.) பாடு, அன்பே, வெட்கப்படாதே.

தான்யா: எனக்கு இதில் விருப்பமில்லை, மிஹேய்.

ஹெர்மன்: பாடுறதுக்கு ஏன் இவ்வளவு சிரமப் படுறே? பாடு, பையன்கள் நீ பாட விரும்புறாங்க.

குரல்கள்: தான்யாவைக் கேட்கிறோம்!

— இது நமக்கு விருந்தளிப்பவளின் முறை!

— ஸ்!.. அமைதி!..

தான்யா (பாடுகிறாள்):

''எத்தனை அருமை! என்னரும் ஜெம்மி
அத்தனை அன்புடன் அவரும் எண்ணி!
பாசமோ கோடி பாவையை நாடி!
நேசமாய் நாளும் வருவார் தேடி!
பெண்மனம் அறியாப் பேதையா அவரும்
புண்பட மனதும் புரிந்தார் தவறும்!
நாளும் ஏங்கியே நானும் தவித்தேன்
பாழும் நினைவைப் பிரியத் துடித்தேன்...''

அவள் திடீரென்று நிறுத்துகிறாள். மெதுவாக எழுந்து நிற்கிறாள், பியானோவைக் கையால் பிடித்தபடி நிற்கிறாள்.

ஹேர்மன் (மனங் குழம்பியவாறு): தான்யா, கண்ணே...

தான்யா (தளர்ச்சியாக முறுவலித்தபடி): என்னைப் பிடிச்சுக்க, இல்லாட்டி விழுந்துறுவேன்.

ஷமானவா: உங்களுக்கு என்ன ஆச்சு?

தான்யா: என்னால் ஒன்னும் பார்க்க முடியலே... ஒவ்வொன்னும் சுத்திக்கிட்டு வருகிறது...

*ஹேர்மன் அவளைத் தனது கைகளில் தாங்கி சோபாவில் படுக்கவைக்கிறான்.*

மிஹேய்: வாங்க, நண்பர்களே, நாம் மற்றொரு அறைக்குப் போகலாம்... சீக்கிரம், இப்போதே, சீக்கிரமாக...

*எல்லாரும் வெளியேறுகிறார்கள். ஹேர்மன் தான்யாவிற்கு ஒரு கிளாஸில் நீர் கொடுக்கிறான்.*

தான்யா (தனது தலையைத் தூக்கிக் கொண்டு, ஹேர்மனை உற்றுப் பார்த்துக்கொண்டு, கட்டுப்படுத்த முடியாதபடி திடீரென்று சிரிக்கிறாள்): ஹேர்மன், ஹேர்மன், நீ ரொம்ப வேடிக்கையானவன்... நீ எவ்வளவு வேடிக்கையானவன் என்பதை உன்னால் கற்பனை செஞ்சு பார்க்கக் கூட முடியாது! (திணற அடிப்பது போல சிரித்துக்கொண்டு.) பாரு, புகழ்பெற்ற கணவர் ஒரு கிளாஸில் நீர் கொண்டுவருகிறார்...

ஹேர்மன்: ஆக... நீ பாசாங்கா செய்துகொண்டிருந்தாய்... எனது நண்பர்களைத் தவிர்ப்பதற்காக இப்படி விரும்பியிருக்கிறாய்...

தான்யா (முறுவலித்தபடி): நேரம் வந்துருச்சு, ஒரு பயங்கரமான ரகசியத்தை உனக்கு நான் சொல் வேன். எனது கணவரே, முழங்காலிட்டு நில்லு!..

ஹேர்மன்: உன்னோட முட்டாள்தனத்தைக் கேக் கிறதுக்கு நான் விரும்பவில்லை! (கதவு நோக்கிப் போகிறான்.)

தான்யா: ஆனா, ஹேர்மன், நானோ ஒரு முக் கியமான விஷயத்தைப் பேச விரும்புகிறேன்...

கதவு ஓசையிடுகிறது.

(தனிமையில்.) முட்டாள். எனது ரகசியத்தைக் கேட்பதற்கு அவன் தகுதியாயிருக்கலெ. சரியில் லையா, செமியோன் செமியோனவிச்? (சுற்றிலும் பார்க்கிறாள்.) ஓ, மரியாதைக்குரிய செமியோன் செமியோனவிச் தனது பயணத்தில் இருக்கிறது.

தெருவிலிருந்து மகிழ்ச்சிமிக்க இசை வருகிறது. விழாக் கால உடையணிந்து, சிரிக்கிற கோமாளியின் முகமூடி அணிந்து, தூஸ்யா உள்ளே நுழைகிறாள்.

(அச்சமுற்று.) என்னடா!.. யாரது?

தூஸ்யா (முகமூடியைக் கழற்றியபடி): நான் தான், நான் தான், தத்யானா அலெக்சேயெவ்னா, பயப்பட வேணாம்!

தான்யா: தூஸ்யா?..

தூஸ்யா (உரக்கச் சிரித்த படி): உரக்க நகைப் பொலி ஏற்படுத்துற முகமூடி இது... சிரிப்பதி லேயே வயிறு புண்ணாயிரும்... ஓர் அன்பளிப்பா இதை நான் உங்களுக்குத் தாறேன்... என்ன

மாதிரியான நாள்! இம்மாதிரி ஒரு விடுமுறையின் போது நான் மாஸ்கோவில் இருப்பது இதுவே முதல் முறை.

தான்யா: உன்னிடம் ஏது இந்த ஆடை அலங்காரம், தூஸ்யா?

தூஸ்யா: விருப்பார்வ உடை! எனது சகோதரனோட, அவனது தொழிற்சாலைத் தொழிலாளர்களோட ஊர்வலத்துக்குப் போனேன்... (ஆடம்பரமாக.) ஒரு லாரியிலே, தத்யானா அலெக்சேயெவ்னா! உங்களைச் சந்திப்பேன் என்று நினைத்துக் கொண்டிருந்தேன்.

தான்யா: நான் வெளியே போகலே. இன்னைக்கு எனக்கு உடம்புக்கு நல்லாயில்லே... ஹேர்மனோ தனது நண்பர்களோடு மேடையில் இருந்தார்.

தூஸ்யா: அதிர்ஷ்டசாலி! லாரியில் கூட ரொம்ப உல்லாசமாகவே இருக்கு.

தான்யா: இங்கே எதுக்கு வந்தே, தூஸ்யா? இன்னைக்கு உனக்கு ஓய்வு நாளாச்சே.

தூஸ்யா: உங்களிடம் ஒரு காரியமாய் வந்தேன், தத்யானா அலெக்சேயெவ்னா. நீங்க ஒன்னும் கோபப்பட வேணாம். (திகைப்புறுகிறாள்.) உண்மையிலே, உங்களிடம் நான் மிகுந்த பிரியத்தோட இருக்கேன், ஆனா... நாம் இப்படி செய்யலாம்: பதினைந்து தேதிக்குப் பிறகு நான் உங்களை விட்டுப் போவேன்... பதினைந்து வரை நான் வேலை பார்ப்பேன், பிறகு நான்... நான் போய் விடுவேன்... (முறுவலிக்கிறாள்.) தன்னுடைய தொழிற்சாலைக்குப் போகும்படி என்னை என் சகோதரன் விரும்புகிறான்... மாலை நேரத்திலோ தொழிற்கல்வி வகுப்பு நடத்து

கிறாங்க. எல்லா நண்பர்களுமே என்னைச் சம்மதிக்க வைக்க முயற்சி செய்யுறாங்க. (கூச்சத்தோடு.) நான் படிக்க விரும்புறேன், தத்யானா அலெக்சேயெவ்னா... ஹோர்மன் நிக்கலாயெவிச்சைப் போல நான் ஓர் என்ஜினியராக விரும்புறேன்.

தான்யா: என்ஜினியராவது அவ்வளவு சுலபமானதுன்னு நீ எண்ணுறியா?

தூஸ்யா: இல்லை, அது சிரமமாதுன்னு நான் உணர்றேன்... உண்மையில், நகரத்தில் இதுதான் என்னோட முதலாவது ஆண்டு, மேலும் கிராமத்திலே நான் ஆரம்பப்பள்ளி படிப்பையே முடிச்சிருக்கேன்... ஆனா நான் எதைப் பத்தியும் கவலைப் படத் தேவையில்லே. எனக்குப் பதினேழு வயசுதான் ஆகுது. படிக்கணுங்கிற ரொம்ப ஆசை எனக்கிருக்கு. மத்தவுங்களுக்காக நான் ஏன் எனது இளமைப் பருவத்தைச் செலவிடணும்?..

*தான்யா அவளை அமைதியாகப் பார்க்கிறாள், தனது மனத்தில் எதையோ மிக முக்கியமானதை நினைத்துக் கொண்டிருப்பதைப் போலத் தோன்றுகிறது. திடீரென்று அவள் தூஸ்யாவைக் கட்டித் தழுவி முத்தமிட்டாள்.*

என்ன அது, தத்யானா அலெக்சேயெவ்னா?!

தான்யா: ஒன்றுமில்லை! (தனது தலையை ஆட்டினாள்.) இதோ கேள், தூஸ்யா, ஒரு வீட்டு வேலைக்காரி பற்றி அல்லது — இன்னும் நல்லது — ஒரு நர்ஸ் பற்றி (முறுவலித்தப்படி) எங்காவது கேட்டா, அவளிடம் எனது முகவரியைக் கொடு.

தூஸ்யா (இவளும் முறுவலிக்கிறாள்): நீங்கள் என்ன...

தான்யா (மெதுவாக): ஆமாம்...
தூஸ்யா (கிளர்ச்சியுற்றவளாக): ஹேர்மன் நிக்கலாயெவிச் மகிழ்ச்சியடைந்தார், இல்லையா?
தான்யா: அவருக்கு இன்னமும் தெரியாது. அவரிடம் சொல்ல வேணாம், தூஸ்யா. அதை நானே செய்து கொள்வேன்... மொத்தத்தில், இது அவருக்காகத்தான், அவருக்காக மட்டுமே.
தூஸ்யா: ஆனா ஏன் அவருக்காக மட்டுமே? ஒரு குழந்தைதான் ஒரு தாயோட முதல் மகிழ்ச்சி.
தான்யா: இல்லை, தூஸ்யா, நான் அதை விரும்பலே... எனக்கு இருபத்தியிரண்டு வயசு மட்டுந்தான். திடீரென்று இப்ப ஒரு குழந்தையா!
தூஸ்யா: இருபத்தியிரண்டு — அது மட்டும் அல்ல, ஏற்கெனவேதான், தத்யானா அலெக்சேயெவ்னா.

அமைதி. வெளியே ஒரு காரின் ஓசை.

நல்லது, நான் போகிறேன் — அது டிரைவருடைய சமிஞ்ஞை!.. ஓ, ஆம், மேலும் ஒரு விஷயம்: என்னோட சகோதரன் தன் மனைவியோட வந்துட்டான். அதனாலே வாடகைக்கு விடுறதுக்கு வீட்டுச் சொந்தக்காரி ஓர் அறை வைச்சிருக்கா. யாருக்காவது அறை தேவைப்பட்டால், அவனை அனுப்புங்க.
தான்யா: நல்லது, தூஸ்யா.
தூஸ்யா: இப்ப நாம் எல்லாரும் லாரியில் கிளப்புக்குப் போகிறோம். அங்கே இப்ப ஆடை அலங்காரப் பந்துப் போட்டியும், தித்திப்புப் பண்டப் போட்டியும் நடைபெறப் போகுது... (மிகவும்

கிளர்ச்சியுற்றபடி.) உங்களோட விருந்தாளி களிடம் ஒரு வேடிக்கை நடத்துங்க. முகமூடியை மாட்டிக்கங்க, ஒரு துணியால் உங்களைச் சுத்திக் கிட்டு, யாரோ போல பாசாங்கு செய்யுங்க... அல்லது எங்காவது ஒளிஞ்சுக்கங்க, அப்புறம் ஒரு பயங்கரமான குரலிலே கத்துங்க...

அவர்கள் சிரித்துக்கொண்டே அறையை விட்டு அப் பால் செல்கிறார்கள். வெளியே வானொலி பாடிக் கொண்டிருப்பது கேட்கிறது. எங்கும் ஒரே இசை மயம். அடுத்த அறையிலிருந்து ஷமானவா உள்ளே நுழைகிறாள், தொடர்ந்து ஹேர்மன் வருகிறான்.

ஷமானவா: இல்லை, இல்லை, நாளைக்கு நான் வீட்டுக்குப் போய் ஆகணும், தலைக்கு மேலே வேலை இருக்கு, எங்கிருந்து தொடங்குறதுன்னு எனக்குத் தெரியலே. நான் அபூர்வமாகத்தான் மாஸ்கோ வருகிறேன், ஆனா மாஸ்கோ நண்பர் களோ, கவலைகளோ என்னிடம் பெருஞ்சுமை யோட இருக்கு – நான் எப்படியும் போயாக வேண்டும்! (புன்முறுவலிக்கிறாள்.) பத்து ஆண்டு களுக்கு முன்னாலே, நான் கல்லூரிப் படிப்பை முடிக்கிற போது, இப்படித்தான் மாஸ்கோவை ஒரு சுத்துச் சுத்தி வருவேன்... அப்போ ஓர் இராணுவ மேலங்கியும், கிழிந்துபோன காது மூடியோடு கூடிய ஒரு குல்லாயும் அணிந்து கொண்டு... நான் எப்படி இருந்திருப்பேன்னு உங்களாலே கற்பனை செய்து பார்க்க முடியு தா? எங்க பாடப்பிரிவைச் சேர்ந்த ஆண்கள் வளைந்து கொடுக்காதவர்களா இருந்தாங்க.

அவுங்க நேரே போர்முனையிலிருந்து, அத்தோட ரொம்ப கண்டிப்பான மாணவர்கள்... இப்ப அவுங்க எல்லாருமே தாடி வச்சுக்கிட்டு, அநு பவசாலிகளா, குழந்தைகுட்டிகளோடு இருக் காங்க... ஆம்...

இடைவெளி.

ஆம்... குழந்தைகள்.

ஹேர்மன்: உங்களுக்கு இருக்கிறார்களா?

ஷமானவா: எனக்குக் குழந்தைகள் இல்லை.

ஹேர்மன்: ஆனா நீங்க... நீங்க கல்யாணம் செய்து கிட்டீங்க, இல்லையா?

ஷமானவா: இல்லே... பாருங்க, நான் இளையப் பெண்ணா இருந்தப்ப, ஒரு மிக அருமையான நபரைக் காதலிச்சேன், ஆனா, முதல்லே எங் களுக்கு நேரமே கிடைக்கலே, அப்புறம் எதிர் புரட்சிக்காரங்க அவரைக் கொன்னுட்டாங்க... இது புஹாராவில் **1926**இல் நடந்துச்சு. (கண நேரம் அவள் அமைதியாக இருக்கிறாள்.) நான் ஒருபோதும் குடும்பத்தோட இருந்ததில்லே. என் தாயாரை எனக்கு நினைவில்லே, பிறகு என் அப்பா **1912**இல் லேனா நதிச் சண்டையின் போது இறந்துட்டார். நம்ம வேலையை மற்ற எல்லாத்தையும் விட நாம் நேசித்தாலுங்கூட, இப்படிப்பட்ட வாழ்க்கை ரொம்ப கஷ்டமான தாகவே போச்சு. (புன்முறுவலித்தாள்.) எப் படியும்... ஒவ்வொன்னும் நல்லாயிருக்குமே, இல் லையா? நீங்க உண்மையாவே உங்க வாழ்க் கையை வாழ்ந்துக்கிட்டிருந்தா, நேற்றை விட

நாளை என்பது எப்பவுமே சிறந்தது.

ஹேர்மன்: மரீயா தனாதொவ்னா, நீங்க நாளைக்குப் புறப்படப் போறீங்க, பிறகு வந்து... வார்த்தைகளால் கூற முடியாத அளவுக்கு கடினமான விஷயங்கள் இருக்கு... ஆனா எனக்கு நீங்க ரொம்ப அழகான நபர்... மொத்தத்தில். (உணர்ச்சியோடு.) இது எல்லாமே மிகவும் முட்டாள்தனமானதா இருக்கு, வந்து... சனியனுக்கு...

ஷமானவா: அப்படி வாங்க! அவர் என்னைப் பார்த்துக் கத்திக்கிட்டிருக்கார்!.. என்னோட மேலங்கியைக் கொண்டு வாருங்க, சீக்கிரமா வாங்க.

ஹேர்மன் முன்னறைக்குள்ளாகச் சென்று மேலங்கியுடன் திரும்பிவருகிறான்.

ஹேர்மன்: என்னை உங்களுக்குப் பிடிக்கலேங்கிறதை என்னால் தெளிவாகக் காணமுடியுது, என்னைத் தொடர்ந்து கேலி பேசிவர்றீங்க, ஏளனமும் செய்யுறீங்க. அத்துடன் கடந்த சில நாளா மொத்தத்தில் என்னைத் தவிர்க்கவும் தொடங்கியிருக்கீங்க... (கடுமையாக.) மொத்தத்திலே, என்னோட நீங்க பேசுகிற முறை எனக்குப் பிடிக்கலே, நான் பள்ளி மாணவன் அல்ல, மேலும் நீங்களும் என்னோட யாரோ ஒரு மூத்த உறவுக்காரருமல்ல. (இடைவெளி.) என்னுடைய தங்கத் தூர்வாரி எந்திரம் இணைக்கப்படுறதைக் காண்பதற்காக இன்னும் இரண்டு வார காலத்தில் உங்களோட தங்கச் சுரங்கத்

திற்குப் போறேன். மக்கள் கமிஸார் குழு இதற் கான தனது ஒப்புதலைத் தந்துவிட்டது. இதை நினைவில் வைத்திருங்கள்.

ஷமானவா: வீட்டிலேயே இருங்க, நீங்க இல்லாம லேயே எங்களாலே அருமையாகச் சமாளிக்க முடியும்.

ஹேர்மன்: இரண்டு வாரங்களுக்கு முன்னாலே இதற்கு நேர்மாறாக் கூறினீங்க. நமது சொந்த உறவு முறைகள் காரணமா இந்தப் பணி தடைப் படக் கூடாதுன்னு நான் நினைக்கிறேன். எந்த வகையிலும் நானே தங்கச் சுரங்கத்திற்குப் போ வேன். எனக்கு மாஸ்கோ, இந்த அறை சலித்துப் போச்சு, மேலும் ஒரே இடத்திலேயே நீண்ட காலத்திற்குத் தங்கியிருப்பது எனது வழக்கமில் லே... என்னோட குழந்தைப்பருவம் முழுவதை யும் நான் பயணங்களிலே செலவிட்டேன்.

ஷமானவா: பயணம் போறதை உங்க அப்பா விரும்பினாரா?

ஹேர்மன்: அவருக்கு வேறு வழி இல்லே. அவர் ஒரு கஷ்டமான ஆள். மத்தவுங்களோட அவரால் ஒத்துப் போக முடியலே, அத்தோட யாரோடும் அவர் சரியாக நடந்துக்கல்லே. அவர் விரும்புன தெல்லாம்...

ஷமானவா: உங்க தாயாரையா?

ஹேர்மன்: இல்லை, என்னை.

இடைவெளி.

ஷமானவா: இங்கு பாருங்க... நீங்க வந்தால், எங் களோட இரண்டு அல்லது மூன்று மாதங்களைச்

செலவிட வேண்டி இருக்கும். உண்மையிலே, அது ஒரே இணைப்பு வேலை போடுற விஷயமல்ல. உங்கள் தங்கத் தூர்வாரி எந்திரத்தின் உண்மை யான செயல்பாட்டு முறைகளை நீங்க பார்த் தாகணும். எனினும், உண்மையில், உங்க எந்திரம் சிறந்ததாக இருக்கலாம், செயல்முறை கண் காணிப்புக்குப் பிறகுதான் இறுதியாகச் சில செவ்வைப்படுத்துதலைச் சரிசெய்து கொள்ள முடியும்... (சிறிது நேர அமைதிக்குப் பிறகு.) ஆக, தான்யாவை உங்களோட கூட்டி வாங்க. (இடைவெளி.) நல்லது?.. ஏன் ஏதேனும் சொல் லாமல் இருக்கிங்க?

ஹேர்மன்: அங்கு செய்யுறதுக்கு அவளுக்கு எது வுமே இருக்காதுன்னு அஞ்சுறேன்.

ஷமானவா: பிறகு, இங்கு செய்யத்தான் அவ ளுக்கு ஏதோ காரியங்கள் இருக்கா?

ஹேர்மன் மௌனமாக இருக்கிறான்.

பொதுவா, அவளாலே என்ன செய்ய முடியும்?

ஹேர்மன்: அவள் ஓரளவுக்கு இசைப் பாடகி, ஓரளவுக்கு அமைப்புப்படம் வரைபவள், ஓரள வுக்கு டாக்டர், ஆனா மொத்தத்தில் அவள் எதுவுமே இல்லை. (இடைவெளி.) இவை எல் லாத்திலும் ரொம்ப அச்சந்தரத்தக்க விஷயம் என்னன்னா, அவளிடம் முழுமையாகத் தன் னுடைய சொந்த ஆர்வங்கள் இல்லை.

ஷமானவா: ஆனா உங்களுக்காகத்தான் அவள் இன்ஸ்டிடியூட்டையும் வேலையையும் விட்டுவிட் டாளே...

ஹேர்மன் (ஆர்வத்துடன்): நான் அதை விரும் பலே. அவள் திரும்பவும் இன்ஸ்டிடியூட்டிற்குப் போகணும்னு அவளிடத்திலே நூற்றுக்கணக் கான தடவை நானும் சொல்லியிருக்கேன்.

*சிரிக்கின்ற முகமூடியோடு, தோளுக்கு மேலாக ஒரு நீண்ட மேசை விரிப்பைச் சுற்றிக்கொண்டு முன்னறை யிலிருந்து வந்து சன்னல் திரைக்குப் பின்னால் தான் யா மறைந்து கொள்கிறாள்.*

நாளைக் காலையிலே நான் ஸ்டேஷனுக்குப் போவேன்... நீங்க போறதைப் பார்ப்பதற்காக.

*இடைவெளி.*

ஷமானவா: வரவேண்டாம்னு உங்களை நான் குறிப்பாகக் கேட்டுக்கிட்டா?

ஹேர்மன்: உங்க பக்கத்திலேயே போக மாட் டேன், மற்றொரு பெட்டிக்குப் பக்கத்திலே நின்னு கவனிப்பேன்... தொலைவில் இருந்து.

ஷமானவா: வேண்டாம்... எதுவும் செய்ய வேணாம். போய் வாறேன். நான் இன்னைக்கு ரொம்பவும் களைச்சுப் போயிட்டேன்.

ஹேர்மன்: பொறுங்க... உங்களைப் பார்க்கக்கூடிய நம்பிக்கை இல்லாமல் வாழ்றது சிரமமானது என் பதையும், முடியாது என்பதையும் நீங்க புரிஞ்சுக் கல்லியா?

ஷமானவா (அவளுக்கு அலட்சியமாகத் தோன்ற மேன்மேலும் சிரமப் பட்டுகிறது): அது எல் லாமே கடந்துபோகும், அது எல்லாமே மறந்து போகும், கேட்கிறீங்களா?

ஹேர்மன்: ஏன்... நீங்க என்னை ஏன் நம்பலே?

ஷமானவா: உங்களைப் பத்தி உணரவோ, சிந்திக்கவோ செய்வதெல்லாம், எந்த வகையில் எடுத்துக்கொள்ள முடியும்? (இடைவெளி.) ஆம்... ஆயினும் உங்களைப் பிரிந்து போகச் சிரமமா இருக்குன்னு எனக்குத் தோனுது...

ஹேர்மன்: மாஷா!..

ஷமானவா: ஒருவேளை நான் அதைச் சொல்லியிருக்கக் கூடாது... ஆமா, ஆமா, உண்மையில் அதை நான் சொல்லியிருக்கக் கூடாது.

ஹேர்மன்: நான்... நான் உங்களோடு வருவேன்.

ஷமானவா: இல்லை, நான் தனியாகத்தான் புறப்படுவேன், நீங்களும் என்னை மறந்துடுங்க. (இடைவெளி.) அவள் உங்களை ரொம்ப நேசிக்கிறா, ஹேர்மன்.

ஹேர்மன் (ஆர்வத்தோடு): அதாவது, நீங்க சொல்றது மாதிரி, மகிழ்ச்சியை நான் விட்டுவிடணும், ஏன்னா...

ஷமானவா (அவனை இடைமறிக்கிறாள்): மகிழ்ச்சியா?.. (இடைவெளி.) உங்களுக்கு என்னைத் தெரியும் — என் வார்த்தையிலிருந்து நான் ஒருபோதும் பின்வாங்கவில்லை. நினைத்துக்கொள்ளுங்கள். ஒருபோதுமில்லை.

ஹேர்மன் (அவளைப் பார்த்துக் கொள்கிறான்): எனக்குப் புரியுது. (தனது தலையைக் குனிகிறான்.)

ஷமானவா: நன்றி. (உறுதியாக.) ஆக, நீங்க தான் யாவோட தங்கச் சுரங்கத்திற்கு வருவீங்க!

ஹேர்மன்: சரி.

ஷமானவா: நாளை ரயில் நிலையத்திற்கு வர மாட்டீங்க. (முன்னறைக்குள்ளாகச் செல்கிறாள்.)

ஹேர்மன்: நான் மாட்டேன். (அவளுக்குப் பின்னால் செல்கிறான்.)

தெரு வானொலி ஒரு வால்ட்ஸ் நடன இசையை ஒலிபரப்பிக் கொண்டிருக்கிறது. திரைக்குப் பின்னாலிருந்து தான்யா மெதுவாக வெளியே வருகிறாள். அவள் இன்னமும் சிரிப்பு முகமூடியை அணிந்து கொண்டிருக்கிறாள், மேசை விரிப்பு அவள் தோளினின்றும் நழுவி விழுகிறது. அவள் அறைக்குள்ளாக மெதுவாக நடக்கிறாள், முகமூடியைக் கழற்றுகிறாள், அதைப் பார்க்கிறாள், அச்சமுற்றது போல அதைத் தரைமீது எறிகிறாள். அடுத்த அறையினின்றும் சிரிப்பு ஓசை வருகிறது. தான்யா சன்னலுக்கு ஓடுகிறாள், சட்டத்தைப் பற்றியபடி ஒளி வெள்ளம் பாய்ந்த நகரை நீண்ட நேரமாகக் கூர்ந்து பார்க்கிறாள். பிறகு அவள் ஆடை அலமாரிக்கு ஓடுகிறாள், ஒரு கைப்பெட்டியை வெளியே எடுத்து, என்னவென்று பாராமலேயே அதிலுள்ள பல்வேறு பொருள்களைக் குழப்பிவைக்கிறாள். அறையிலுள்ள கடிகாரம் ஒலிக்கிறது. தான்யா தனது ஜாக்கெட்டையும், வட்டத் தொப்பியும் அணிந்து கொண்டு வாசலுக்குச் செல்கிறாள், நிற்கிறாள், அறையை நீண்ட நேரமாகப் பார்க்கிறாள். தனக்கு விருப்பமான சிற்றழுகுப் பொருள்களை நோக்கிச் செல்கிறாள். விளையாட்டு இசைப் பெட்டியைக் கையில் எடுத்து, கைப்பிடியைத் திருகுகிறாள், ஓர் அருமையான இசை வருகிறது. அதைத் தனது பைக்குள்ளாக விரைந்து போட்டுக் கொள்கிறாள், திரும்பவும் கதவுக்குச் சென்று, மீண்டும் நிற்கிறாள். முன்னறையில் இரைச்சல் கேட்கிறது.

தான்யா: அது ஹேர்மன்... நான் எப்படியாவது

வெளியேறியாகணும்... அவரைச் சந்திக்காம லேயே...

வானொலி அறிமுகமான போல்கா என்னும் நடன இசையை ஒலித்துக் கொண்டிருக்கிறது. தான்யா ஆடை அலமாரியை உற்றுப்பார்க்கிறாள், முன்னர் போலவே அதில் ஒளிந்து கொள்கிறாள், தனக்குப் பின்னால் கதவைச் சாத்திக்கொள்கிறாள். ஹேர்மன் அறைக் குள்ளாக விரைந்து நுழைகிறான். தான்யா ஆடை அலமாரியிலிருந்து வெளியே வருகிறாள்.

என்னோட கழுத்துத்துண்டு எங்கே?.. நான் அவசியம்... எனக்கு ஒரு கழுத்துத்துண்டு கட் டாயம் வேணும்.

ஹேர்மன் (திரும்பியபடி): நீ எங்கே போகப் போறே? தேநீர் என்னவாச்சு?

தான்யா: தேநீர்க்கொண்டி சமயலறையில் இருக்கு, அது தயாராக இருக்குன்னு நினைக்கிறேன்... ஆனா தையக்காரியிடம் நான் போக வேண்டி இருக்கு... ஒரு நிமிடம் மட்டுமே...

ஹேர்மன்: சீக்கிரமே திரும்பி வந்துருவியா?

தான்யா: ஆமாம்... அது அதிகத் தொலைவு இல் லை. (அதற்கு மேலும் தன்னைக் கட்டுப்படுத்த முடியாதவளாய், அவனிடம் ஓடிச்சென்று இறுக் கமாகக் கட்டிப்பிடித்துக்கொள்கிறாள்.)

ஹேர்மன்: இதெல்லாம் என்ன?

தான்யா: நீ நல்லவன், இல்லையா, ஹேர்மன்?.. நீ நல்லவன்... நீ நல்லவன் என்று எனக்குச் சொல்லு, சொல்லு: ''நான் நல்லவன்.''

*ஹேர்மன் (முறுவலித்தபடி):* நான் கெட்டவன்.

*தான்யா:* இல்லை, இல்லை, நீ நல்லவன். உன்னிடத்தில் எல்லாமே நல்லபடியாக நடக்கட்டுமே. *(அவனைப் பார்த்துக்கொண்டு முறுவலிக்கிறாள்.)* உனக்கு நினைவு இருக்கா: பியானோவுக்கு நாம் வாடகை கொடுக்கணும்... அதற்கு நாம் கொஞ்சம் பணம் கடன்பட்டிருக்கோம்... *(கதவருகே செல்கிறாள்.)*

*ஹேர்மன்:* தான்யா!

*தான்யா (நின்றாள்):* என்ன?

*ஹேர்மன்:* எனக்குக் கொஞ்சம் சிகரெட் வாங்கி வா. உன்னிடம் ஏதாவது காசு இருக்கா?

*தான்யா பதில் பேசவில்லை.*

இதோ, எடுத்துக்கொள்... *(அவளிடம் கொஞ்சம் பணம் கொடுக்கிறான்.)*

*தான்யா:* சரி.

*ஹேர்மன் அடுத்த அறைக்குள் செல்கிறான். தான்யா பணத்தைப் பார்க்கிறாள், அதை மேசை மேல் வைத்து விட்டு விரைந்து வெளியேறுகிறாள். கண நேரத்திற்குப் பிறகு முன்கதவு சாத்தப்படும் ஓசை கேட்கிறது.*

## காட்சி மூன்று

*மார்ச் பதின்மூன்று, 1936.*

*மாஸ்கோவின் புறநகர்ப் பகுதியிலுள்ள மரத்தாலான ஒரு வீட்டில் ஒரு சிறிய அறை. பளிச்சென்று இருக்கும்*

சுவர்க் காகிதங்களால் சுவர்கள் மூடப்பட்டிருக்கின் றன. அறையில் மிகக் குறைந்த பொருள்களே இருக் கின்றன. வெள்ளை மஸ்லின் துணி போர்த்தப்பட்ட குழந்தையின் கட்டில் ஒன்று மூலையில் இருக்கிறது. அது நண்பகல். சன்னலருகே தான்யா லினன் துணிகளை இஸ்திரிப் பெட்டியால் தேய்த்துக்கொண் டிருக்கிறாள். அவளுக்கு அருகே ஒரு மேசை மன்னால் ஒரு பட்டி உட்கார்ந்து கொண்டிருக்கிறாள். வெளிப் புறம் புனி விழுந்து கொண்டிருக்கிறது, சன்னல் வழி யாகப் பனிபடிந்து நிற்கும் மரங்களைக் காண முடியும்.

பாட்டி (தொடர்கிறாள்): ஆமாம், அன்பே, நான் ரொம்ப மோசமான பழைய காலத்தில் வாழ்ந் தேன். என்னோட விருப்பத்திற்கு மாறா என் னைக் கலியாணம் செஞ்சுகொடுத்தாங்க. (கண நேரச் சிந்தனைக்குப் பிறகு.) இல்லை, என் கணவரிடத்தில் எனக்கு எந்த வகையிலும் அநு தாபம் ஏற்படலே. அவர் ஒரு வியாபாரி. எவரும் பொறாமைப் படுற மாதிரி வாழ்ந்தான். ஆனா, ஓ, எனக்கு அது சங்கடமா இருந்துச்சு. கலியாணத்துக்குப் பின்னாலே என்னை அவர் மாஸ்கோவுக்குக் கூட்டிப்போனப்ப, நான் மூனு நாளைக்கு விம்மி விம்மி அழுதேன். (சற்று இடைவெளிக்குப் பிறகு.) மாஸ்கோவிலோ விளக்கு ஏற்றுபவன் ஒருத்தன் எங்க வீட்டைத் தாண்டிப் போறது வழக்கம். அவன் பெயர் வான்யா ஷாப்கின். அவன் எளிமையான இளைஞன், கபடமற்றவன்... என்னோட வாழ்க் கை அவ்வளவு கொடுமையா இருந்துச்சு, பாச மான சொற்களுக்காக ஏங்கினேன், ஆகவே நான் வான்யாவைக் காதலிச்சேன். எனக்கு

நினைவிருக்கு, வசந்த காலத்தில் வைகறைப் பிரார்த்தனைக்குப் பின் கோயிலிலிருந்து நான் வந்துக்கிட்டிருந்தேன். அவன் எங்க தோட்டத் திற்கருகே என்னைச் சந்திச்சான். காலை விடியிற வரை நாங்க பேசினோம். ஈஸ்டர் அந்த ஆண்டு ரொம்பத் தாமதமா வந்துச்சு, மரத்திலெல்லாம் இலைகள் ஏற்கெனவே துளிர்த்து இருந்துச்சு, எங்க தோட்டம் அவ்வளவு அருமையா இருந்துச்சு... ராத்திரி முழுக்க மாஸ் கோவில் மணி ஒலிச்சது. (இடைவெளி.) ஆனா... எங்க காதல் நீடிச்சு நிற்கலே. அந்த இலையுதிர் காலத்தில் என் வான்யாவை ராணுவத்திற்கு அழைச்சுட்டாங்க. அவனுக்காக நான் காத் திருந்தேன், என் வாழ்க்கை பூரா காத்திருந் தேன், ஆனா எந்தப் பயனுமில்லாமப் போச்சு. இராணுவ வீரர்களோட என் வான்யாவும் எங் கோ காணாமப் போய்ட்டான்.

இடைவெளி.

தான்யா: அவன் திரும்பி வரவே இல்லியா?

பாட்டி: இல்லை. அத்தோட என் கணவனிடத்தில் எனக்கு எந்த அநுதாபமும் இல்லே. அவன் தனது சொத்தைப் பத்தி வெத்து ஆரவாரம் செய்தான்... ஆனா அவன் செத்தப்ப அவனது எல்லா முதலீட்டையும் கணக்கிட்டாங்க, கடன் களைத் தவிர வேறு எதையும் அவுங்க கண்டு பிடிக்கலே. கிராமத்திற்கே நான் திரும்பப் போ யிருக்கணும். ஆனா நானொரு மடச்சி, இங்கே யே தங்கிட்டேன். எனக்கு ஒரு மகனோ மகளோ

இருந்ததில்லே. நான் மட்டுமே தனியாக இருந்தேன். இதோ பார், என் முழு வாழ்க்கையும் பாழாப் போச்சு. இப்ப எனக்கு வயசு எண்பத்தி அஞ்சு. ஆனா நான் இன்னும் எதுக்காகவோ காத்துக்கிட்டிருக்கேன்... மத்த கிழவிகள் எல்லாம் சாகத் தயாராகிட்டாங்க, ஆனா நான் இன்னமும் காத்துக்கிட்டிருக்கேன், காத்துக்கிட்டிருக்கேன்.

தான்யா: ஆனா, பாட்டி, நீங்க எதுக்காகக் காத்துக்கிட்டிருக்கீங்க?

பாட்டி: என் வாழ்க்கை முழுக்க நான் வாழ்ந்துட்டேன். அதிலே எந்த அருத்தமும் இல்லே. நினைவிலே வைக்கிற மாதிரி எதுவுமே என்னிடத்திலே இல்லே, வான்யாவைத் தவிர. ராத்திரியிலே அங்கே கிடந்து என்னோட இளமைப் பருவத்தை நினைச்சுப் பார்க்க விரும்புறேன், என்னால் முடியலே... என்னோட முழு வாழ்க்கையும் வெறுமையானது போலத் தெரியுது. நான் வாழவே இல்லைங்கிற மாதிரி இருக்கு.

*இடைவெளி. பியானோவில் பழகக்கூடிய முறையில் யாரோ வாசிப்பது கேட்கிறது.*

தான்யா: யாரது?

பாட்டி: ஒரு சிறுமி. செருப்புத் தைக்கிற மத்வேயெவோட மகள். இசைக்கலைஞர் ஆக முயற்சிக்கிறாள்.

தான்யா (*மெதுவாக*): நான் கடைசியா வாசித்து ஏறத்தாழ ஓராண்டாச்சு. என்னோட விரல்கள் ஒத்துழைக்காதுன்னு நம்புறேன். மேலும் நானுங்கூட...

பாட்டி: அதெல்லாம் முட்டாள்தனம்... நீ இன்னமும் சிறுமியா, முட்டாளா இருக்கே...

*இடைவெளி.*

தான்யா: பாட்டி, மனசிலே எதுவும் வைச்சுக்க வேணாம், அறை வாடகை தர எனக்குக் கொஞ்சம் சுணங்கும்... இப்பவெல்லாம் வேலையே இல்லை.

பாட்டி: அந்தோ! நீ மத்தவுங்களைப் போல இல்லே. அப்பாகிட்டேயிருந்து நீ கொஞ்சம் பணம் வாங்கியிருக்கணும். அது அவனுடைய குழந்தை தானே.

தான்யா: யூரி என்னோட பிள்ளை, என்னோட பிள்ளைதான்!.. அப்பா இல்லே, அது பத்தி அவனுக்கு எதுவும் தெரியாது, வந்து... நீங்க அது பத்திப் பேசவே கூடாது, பாட்டி!

பாட்டி: நீ ஒரு முட்டாள், நீ எப்பவுமே விஷயங்களைக் கற்பனை செய்யுறே... இப்பவெல்லாம் அதைப்பத்தி சட்டங்கூட இருக்கு. நீயோ கற்பனை செஞ்சுக்கிட்டே இருக்கே. *(அன்புடன்.)* என்ன, குழந்தை தூங்குறானா?

தான்யா *(கட்டில் வரை சென்று)*: ஆமாம். *(முறுவலிக்கிறாள்.)*

பாட்டி: நல்லது, அவன் தூங்கட்டும், அது அவனுடைய வேலை. ஆனா பணத்தைப் பற்றிக் கவலைப்பட வேணா — உனக்கு ஏதாவது கிடைக்கும்போது, நீ எனக்குத் தரலாம்.

*முன்னறையில் இரைச்சல் கேட்கிறது.*

தான்யா: தூஸ்யா!

கதவுக்கு ஓடுகிறாள். வாயிற்படியில் தூஸ்யாவைச் சந்திக்கிறாள். அவளோ அடையாளந் தெரியாதபடி முற்றிலுமாக பாதி வயதாகிக் காணப்பட்டாள்.

ஏன்... இவ்வளவு நேரமாச்சு? சீக்கிரமா உன்னோட மேலங்கியை எடுத்துக்க. இன்னைக்கு காலையிலே நீ போனதிலிருந்து நான் கடிகாரத்தையே பார்த்துக்கிட்டிருக்கேன். என்ன... நீ அவரைப் பாத்தியா?

தூஸ்யா: ஆமாம்.

இடைவெளி.

தான்யா: இப்ப அவர் எப்படியிருக்கான்னு சொல்லு. வயதாகிப் போய்ட்டாரா? அதிகம் மாறி இருக்காரா? (இடைவெளி.) ஏன் எதுவுமே சொல்ல மாட்டேங்கிறே? அவர் நலமில்லாம இருக்காரா? அவருக்கு நல்லமில்லே, அப்படியா?

தூஸ்யா: தொடக்கத்திலிருந்து என்னைப் பேச விடு... நான் படியிலே ஏறிப்போனேன், மணியை அடிச்சேன். உன் பெயர் எழுதின பழைய பலகை இன்னமும் அங்கே இருக்கு.

தான்யா (மகிழ்ச்சியோடு): அப்படியா?

தூஸ்யா: நீண்ட நேரமா எந்தப் பதிலும் இல்லே, பிறகு காலடியோசை கேட்டது. அது ஹேர்மன் நிக்கலாயெவிச்சினுடையது தான். என்னைப் பார்த்தப்ப அவர் மகிழ்ச்சியடைந்தார்! ‘‘கஷ்

டப்பட்டு உன்னை அடையாளம் கண்டுக்கிட்டேன், தூஸ்யா...'' என்றார். அத்தோட எந்நேரமும் அவர் சிரிச்சுக்கிட்டே இருந்தார்.

தான்யா: அவர் மகிழ்ச்சியோடு இருக்கார்...

*இடைவெளி.*

தூஸ்யா: ஆமா, அவர் மகிழ்ச்சியா இருக்கார்... அவர் எனக்குக் கொஞ்சம் தேநீர் தந்தார்.

தான்யா: அவரே அதைப் போட்டாரா?

தூஸ்யா: இல்லே.

தான்யா (கலவரத்தோடு): யார் போட்டது?

தூஸ்யா: ஆனா, பாரு, தான்யா, அவர் மட்டும் வந்திருக்கலே...

தான்யா (மெதுவாக): அவளோடு இருந்தாரா?

*இடைவெளி. தூஸ்யா தலையசைக்கிறாள்.*

அவள் என்ன, எங்கள் வீட்டில் தங்கியிக்கா... எங்களோட அறையில்?

தூஸ்யா (கணநேர அமைதிக்குப் பிறகு): அவுங்க கலியாணம் செஞ்சுக்கிட்டாங்க, தான்யா.

*இடைவெளி.*

தான்யா: அப்படியா? (ஒரு தீப்பெட்டியைப் படபடக்கச் செய்கிறாள்.) ஓ, சரி, சரி... (சன்னலுக்குச் செல்கிறாள்.)

*அமைதி.*

தூஸ்யா: பிறகு அவர் எல்லாவகையான கேள்விகளையும் கேட்க ஆரம்பிச்சுட்டார்... இந்த இலையுதிர் காலத்தில் கல்லூரிக்குப் போகத் தொடங்கிட்டேன்னு அவரிடத்திலே சொன்னேன். அவர் உண்மையாவே ஆதரித்துப் பேசினார். அதுபோலவே மரீயா தனாதொவ்னாவும்.

இடைவெளி.

தான்யா (விரைவாக): நீங்க என்னைக் குறிப்பிட்டீர்களா?

தூஸ்யா: நீ எங்கே இருக்கிறாய்ன்னு எனக்குத் தெரியுமான்னு அவர் கேட்டார். ஆனா, நாம் பேசிக்கிட்டபடி அவரிடம் சொன்னேன்: ''கடந்த வசந்தத்தின் போது தன்னோட பெற்றோர்களுடன் இருக்கிறதுக்காக அவள் கிரஸ்னதார் நகரத்துக்குப் போயிட்டா.''

தான்யா: எப்படி... எந்த மாதிரியான முறையிலே அவர் கேட்டார்?

தூஸ்யா: உணர்ச்சி வசப்பட்டது போலத்தான். உன்னிடமிருந்து ஒரே ஒரு கடிதந்தான் வந்துச்சு என்றார் — உனக்கு நினைவிருக்கும், அவரிடமிருந்து பிரிஞ்சு போறதா அறிவிச்சு அவருக்கு எழுதினாய். ''அதன் பிறகு கிரஸ்னதாருக்குக் கூட அவளுக்கு எழுதினேன், ஆனா இன்னமும் ஒரு பதில் இல்லை,'' என்று சொன்னார். உன்னைப் பத்தி ரொம்பக் கவலைப்பட்டார்.

தான்யா: ஆமாம், ஆமாம். அவர் ஒரு நல்ல மனுஷந்தான்... ஒரு கெட்ட மனுஷனா

இருந்தா நான் காதல் வசப்பட்டிருக்க மாட்டேன், இல்லையா?

தூஸ்யா: நீ அவரை உண்மையாகவே காதலிக்கிறாயா? அப்படி இருந்தால், நீ அவரை விட்டிருக்கக் கூடாது.

தான்யா: நீ சொல்றது சரியா இருக்கலாம்.

தூஸ்யா: பாரு, அவரிடம் கிட்டத்தட்டச் சொல்லிட்டேன்... அங்கே நான் உட்கார்ந்துக்கிட்டிருந்தேன், ''உங்களுக்கு ஒரு மகன் இருக்கிறான், ஹேர்மன் நிக்கலாயெவிச்,'' என்று அவரிடம் கூறும்படி யாரோ என்னை வற்புறுத்திக்கிட்டிருப்பது போல இருந்துச்சு.

தான்யா: இல்லை... அவருக்குக் கட்டாயம் தெரியக்கூடாது, அவருக்குத் தெரியவே கூடாது!

மீண்டும் பியானோ வாசிப்பது கேட்கிறது.

தூஸ்யா: ஹேர்மன் நிக்கலாயெவிச்சினுடைய இடத்தில் இருந்த பியானோ இல்லை. அவுங்க அதைத் திரும்பி அனுப்பிட்டாங்க...

தான்யா: எதுக்காக அதை விரும்புனாங்க?..

தூஸ்யா: வானொலி கூட வேலை செய்யலே. ஏரியல் கம்பி காத்திலே அறுந்து போச்சுன்னு சொல்றாங்க.

தான்யா: பலகையைக் கீழே எடுத்து வைக்காமலா இருக்காங்க?

தூஸ்யா: அது இன்னமும் அங்கே தொங்கிக்கிட்டுத் தான் இருக்கு.

தான்யா: அது அப்படியே இருக்கப் போகுது.

இடைவெளி.

தூஸ்யா: மதியச் சாப்பாடுக்கு என்னை எதிர்பார்க்காதீங்க, பாட்டி, இன்னைக்கு மாலை வரை எங்களுக்கு வகுப்பிருக்கு.

பாட்டி: திரும்பவும் போகவா போறே? ஆனா இன்னைக்கு ஞாயிற்றுக்கிழமை ஆச்சே.

தூஸ்யா: என்னாலே தங்க முடியாது. நாளை எங்களுக்குத் தேர்வு இருக்கு!

பாட்டி (நிம்மதியைக் காட்டும் குரலில்): ஓ, தேர்வு, தேர்வு... நீ உன் தலையைப் போக்கி ஆகணும் போல!..

தூஸ்யா (தனது குல்லாயை வைத்தபடி): சரி, நான் ஓடியாகணும். ஓ, என்னோட கையுறைகள் துண்டாகிப்போச்சு.

தான்யா: அவற்றை விட்டுவிட்டுப்போ, நான் சரி செய்து வைப்பேன். (கையுறைகளை எடுக்கிறாள்.) விரைந்து போ, இல்லாட்டி சுணங்கிப் போயிருவே.

தூஸ்யா (அமைதியாக): நீ... நீ துயரப்பட வேணாம், தான்யா, கூடாது...

இடைவெளி.

தான்யா: கறுப்பு நூல்லே தைப்பேன், எங்கிட்டே பழுப்பு நிறத்திலே இல்லை. சரி, இப்ப நீ போ.

*தூஸ்யா முன்னறைக்கு வெளியேறுகிறாள், பாட்டி பின்தொடர்ந்து செல்கிறாள். தான்யா மேசை முன்னர் அமர்ந்து தூஸ்யாவின் கையுறைகளைச் சரி செய்யத் தொடங்குகிறாள். மேல் மாடியில் ஏதோ அற்பமான ராகத்தை யாரோ பியானோ வாசிக்கத் தொடங்குகிறார்கள். கிரீஷ்சென்கோ பின்தொ*

டர பாட்டி நுழைகிறாள், அவனோ வெட்கப்படக் கூடிய, அருவருப்பான, கூச்சமுள்ள இளைஞன்.

பாட்டி: இந்த வழியா, அன்பே. (அடுப்புக்குப் போகிறாள்.)

கிரீஷ்செங்கோ: மன்னிக்கணும்... நீங்க தத்யானா ரியாபீனினா?

தான்யா (திகைப்போடு): ஆமாம்.

இடைவெளி.

கிரீஷ்செங்கோ: வணக்கம். (தனது குல்லாவை எடுக்கிறான்.) நான் கிரீஷ்சென்கோ அந்திரேய் தராஸவிச். லெத்கோவ்ஸ்கியின் சிபாரிசின் பேரிலே நான் உங்களைப் பார்க்க வந்திருக்கேன்...

தான்யா (மகிழ்ச்சியோடு): ஓ, உட்காருங்க, தயவு செய்து!

கிரீஷ்செங்கோ: விஷயம் என்னன்னா, எனக்கு ஓர் அவசரமான, மிக முக்கியமான வேலை இருக்கு... உலோக உற்பத்தித் தொழில் மக்கள் கமிஸாரிடம் எவ்வளவு முடியுமோ அவ்வளவு விரைவா அமைப்புப்படங்களை ஒப்படைக்க வேண்டி இருக்கு. (புன்முறுவலிக்கிறான்.) அது மிக அவசரமான வேலை... ஆனா நீங்க ரொம்ப வேலையா இருக்கீங்கன்னு, இல்லையா?

தான்யா: நீங்க தப்பா நெனச்சிட்டீங்க. நான் உங்களோட அமைப்புப்படங்களைச் செய்ய முடியும்.

கிரீஷ்செங்கோ: நன்றி... மிக்க நன்றி உங்களுக்கு! நான் ரொம்பக் கடமைப்பட்டிருக்கேன். இதோ என்னோட நகல் அமைப்புப்படங்கள்.

(அமைப்புப்படங்களின் கட்டை அவிழ்க்கிறான்.) இவை கறைபடிந்து தூய்மையற்று அலங்கோலமா இருக்கு, பாருங்க. துரதிரஷ்டமாக, எனக்கு அமைப்புப்படம் உருவாக்குபவனின் திறமை இல்லை... என்னோட கருத்துப்படி எந்தவகையிலும் இது ஒரு பேய்த்தனமான வேலைதான். (சன்னலுக்கு வெளியே பார்க்கிறான்.) இப்ப என்னாலே விவரங்களைச் சொல்ல இயலாது... இன்னைக்குச் சாயங்காலம் நான் திரும்பவும் வர முடியுமா?

தான்யா: நல்லது. (அமைப்புப்படங்களைப் பார்க்கிறாள். என்ன இது?

கிரீஷ்சென்கோ: ஒரு புதிய மின்சாரத் தங்கத் தூர்வாரி எந்திரத்தின் அமைப்புப்படங்கள்... என்னுடைய சொந்த அமைப்பு.

தான்யா: மின்சாரத் தூர்வாரியா?

கிரீஷ்சென்கோ: ஆமாம். ஏன் இந்தளவுக்கு வியப்படையறீங்க?

தான்யா: ஆனா கடந்த ஆண்டு மக்கள் கமிஸார் குழு ஒரு புதிய தூர்வாரியை அங்கீகரிச்சது... பலஷோவின் அமைப்பு.

கிரீஷ்சென்கோ: என்னோடது சிறந்ததா இருக்கு மாதிரி செய்கை அளவிலே முடியுமே, இல்லையா?

தான்யா: உங்களோடது சிறந்ததா?

கிரீஷ்சென்கோ: ஒரு சிக்கலான கேள்வி... எனக்குத் தெரியாது, என்னால் கூற முடியாது. உண்மையிலே. பலஷோவின் வேலை எனக்குத் தெரியும். கஷ்டமில்லாது கூறினால், தெரியுமா... ஒருவேளை என்னோடது சிறந்தது. (அமைப்புப் படங்களைப் பார்க்கிறான்.) சிறந்தது, ஆம், சிறந்தது

தான்யா: அப்படியா? (ஆர்வத்தோடு அவனைப் பார்க்கிறாள்.)

கிரீஷ்சென்கோ (கூச்சத்தோடு): ஏன் என்னை இப்படிப் பார்த்துக்கிட்டிருக்கீங்க?

தான்யா: ஹேர்மன் பலஷோவ் ஒரு திறமையான அமைப்பாளரா எனக்குத் தோனுது, ஆனா இதோ வந்துட்டீங்க, நீங்க அவரை விட மேலும் திறமையானவர். (முறுவலிக்கிறாள்.) திறமை வாய்ந்த இளைஞரை உற்றுப்பார்க்க எனக்கு அநுமதியுங்க.

கிரீஷ்சென்கோ (கலவரத்தோடு): நீங்க என்னை முற்றிலும் தவறாகப் புரிஞ்சுக்கிட்டீங்க... நான் ஒன்னும் இப்படிச் சொல்ல விரும்பலே... உண்மை என்னனா, பலஷோவ் மிகவும் திறமையான அமைப்பாளர்... ஆனா நேரம்... சொல்லப் போனா, ஒரே இடத்திலேயே நிற்கிறதில்லை. நமது கடமை பின்தங்கிப் போயிறாம அதனோடு நிதானமாக முன்னோக்கிப் போறதுதான். அது தான் விஷயம். ஆனா பலஷோவோடு என்னை ஒப்பிட்டுக்கொள்வதற்கு நிச்சயமாக நான் விரும் பலே. (இடைவெளி.) நீங்க அவரைப் புரிஞ்சுக் கிட்டிருக்கீங்களா?

தான்யா: ஓரளவுக்கு.

கிரீஷ்சென்கோ: நான் ஊகிச்சேன். நீங்க அவருக் காக அமைப்புப்படங்களை வரைஞ்சீங்களா?

இடைவெளி.

இது ஒரு வேடிக்கை நாடகம் போலவே.

தான்யா: ஆமாம். (சற்று அமைதிக்குப் பிறகு.)

மன்னிக்கணும், ஆனா நான்... உங்களோட அமைப்புப்படங்களை எடுத்துக்கிற முடியாது.

கிரீஷ்சென்கோ: ஆனா ஏன்?

தான்யா: துரதிரஷ்டமாக எனக்கு ரொம்ப வேலை இருக்கு... நான்...

கிரீஷ்சென்கோ: ஐயையோ... (அமைப்புப்படங் களைச் சுருட்டுகிறான்.) நான் நினைச்சேன், நீங்களும் நானும்...

தான்யா: பொறுங்க. (பாட்டியைப் பார்க்கிறாள். அவள் அசையாத படி எதுவுமே பேசாமல் உட்கார்ந்து கொண்டிருக்கிறாள்.) எனக்கு... எனக்குத் தெரியாது... (இடைவெளி.) அந்த அமைப்புப்படங்களை எனக்குக் கொடுங்களேன்... மற்ற வேலையை நான் ஒதுக்கி வைத்துவிடு வேன். நான் உங்களை விரும்புறேன்... தராஸ் அந்திரேயெவிச்.

கிரீஷ்சென்கோ (கூச்சத்தோடு): அந்திரேய் தரா ஸவிச். நான் மிக்க மகிழ்ச்சியடைறேன்.

தான்யா: இவை மட்டுந்தானா உங்க அமைப்புப் படங்கள்?

கிரீஷ்சென்கோ: ஆமாம்.

தான்யா: அவற்றை நான் வைத்துக்கொண்டால் பயந்து போயிற மாட்டீர்களே? (இடைவெளி.) நான் போய்... அவற்றை எரித்துவிட்டால் என்ன?

கிரீஷ்சென்கோ (அச்சமுற்றபடி): என்ன நீங் கள்... ஆனா ஏன்?.. இல்லே, இல்லே, வேண் டாம், தயவு செய்து கவனமாக இருங்க!

இடைவெளி.

*தான்யா:* சன்னலுக்கு வெளியே ஏன் பாக்கிறீங்க?

*கிரீஷ்சென்கோ:* நான் பார்த்துக் கிட்டிருக்கி றேனா? (கூச்சத்தோடு முறுவலிக்கிறான்.) இருக் கலாம். என்னோட... நண்பன் எனக்காக வெளி யே காத்துக்கிட்டிருக்கான். (கதவுப் பக்கம் பின் னோக்கிச் செல்கிறான்.) ஆகவே, இன்னைக்குச் சாயங்காலம் நான் திரும்பி வருவேன். (வெளி யேறுகிறான்.)

*தான்யா:* பாட்டி, இதுக்கு அருத்தம் பணம். நான் திரும்பவும் பணக்காரியாகப் போறேன்.

*பாட்டி:* வேடிக்கையான பையன்... ஓ, ஆமாம், வேடிக்கையானவன்...

*தான்யா (அமைதியாக):* அவன் ஒருத்தியோட வந் தான். அவனுக்காக வெளியே அவள் காத்துக் கிட்டிருந்தா. உலகத்திலேயே இவன் தான் ரொம் பவும் திறமையான இளைஞன்னு நினைச்சுக் கிட்டிருக்கா. எல்லாமே ரொம்ப வேடிக்கையா இருக்கு, பாட்டி! ஒரு காலத்திலே அவருக்காக மட்டுமே நான் அமைப்புப்படங்களை வரைந் தேன்... இப்ப ஒவ்வொருத்தருக்காகவும்.

*பாட்டி:* தூஸ்யா சீக்கிரமா ஓர் என்ஜினியராகி விடுவாள், பிறகு நீ அவளுக்காக வரைவாய். (எழுந்து நிற்கிறாள்.) நான் போய் உணவுக்கு முன்னாலே ஒரு குட்டித்தூக்கம் போட்டுக்கிறேன். (அவள் வெளியே போகும் போது.) அவனோ ஒரு வேடிக்கையான பையன்... ரொம்பவும் கூச்சப்படுறான்... (வெளியேறுகிறாள்.)

*தான்யா (கட்டில் வரை போய்க்கொண்டு):* நீ விழிச்சிட்டியா, யூரி? தூங்கு. உனக்கு இன்னமும் ராத்திரி தான்... தூங்கு, செல்வமே. (அவனை

*ஊசலாட்டியபடி பாடுகிறாள்):*

''முற்றத்திலே வந்ததாம் கரடி ஒன்னு
முதுகுக்குப் பின்னே வரலியே நின்னு
உனக்காக வரலே உறுதியா நம்பு,
உன்னோட அம்மாவை நீயும் நம்பு...''

தூங்கு, தூங்கு, கண்ணே. நீ வளர்ந்து பெரிய வனாகி, புத்திசாலியான அழகு மிக்க இளைஞ னாகும் போது, எத்தனையோ ஆண்டுகள் கடந்து றும். மாலை நேரங்களிலே மாஸ்கோ நகரத் தெருக்களிலே நாம் நடந்து போவோம். ஒரு வேளை நாம் அவரைச் சந்திப்போம்... நான் அவர் கிட்டே சொல்வேன்: ''இவன் என் மகன்.'' என்னோட பையன். (இடைவெளி.) எவ்வளவு அமைதியா இருக்கு! உன்னையும் என்னையும் தவிர இந்த உலகம் பூராவும் யாருமே இல்லாதது போல இருக்கு... பனி பெய்து கொண்டிருக்கு... பனி விழுகும் போது, உனக்கு அது பிடிச்சிக்கி றதா? உனக்கு அது ரொம்பப் பிடிக்குதா? நானுங்கூட அதை ரொம்ப விரும்புறேன். பனி பெய்யட்டும்! எங்கோ தொலைவிலே, வெகு தொலைவில், உலகத்தின் விளிம்பில், குளிர்ச்சி யான சைபீரியாவில் ஓநாய்களும், பனிப்புயலும், கரடிகளும் இருக்கு... ஆனா கரடிகளுக்கு நீ பயப்படலே, நீ துணிச்சல்காரன், இல்லையா? அவையும் உயிர்வாழணும், ஓநாய்கள், கரடிகள், புலிகள்... நீ பெரியவனாக வளர்ந்து அவை எல் லாத்தையும் வெல்வாய். தூங்கு, என் அரிய செல்வமே, சேர்ந்திருக்கிறது நமக்கு எவ்வளவு

*அருமையா இருக்கு... நீயும் நானும் தான்... நீயும் நானும்...*

*பனி விழுந்து கொண்டிருப்பதைச் சன்னலுக்கு வெளியே பார்க்க முடிகிறது.*

## காட்சி நான்கு

***ஜூலை ஏழு, 1936.***

*வெப்பமான கோடைக்கால மாலை நேரம். அதே அறை. குழந்தைக் கட்டில் ஏதுமில்லை. எங்கு பார்த்தாலும் ஒழுங்கற்று இருக்கும் அடையாளங்கள் — எல்லாவகையான பொருட்களுமே இடம்மாறி இருக்கின்றன. மேசையின் மீது மருந்துப் போத்தல்கள் நிறைந்திருக்கின்றன. சூரியன் மறைந்து கொண்டிருக்கிறது. சன்னல்களைத் தொடுகின்ற அளவுக்கு மரங்களின் இலைகள் வளர்ந்திருக்கின்றன. இறுக்கமாக இருக்கிறது. அறையின் மேலுங் கீழும் போய் வந்து கொண்டிருக்கக்கூடிய தான்யாவை, கையற்ற நிலையில் பாட்டி பார்த்துக் கொண்டிருக்கிறாள். அமைதி.*

தான்யா *(சன்னலுக்குப் போகிறாள்)*: வெப்பமா இருக்கு... இடியோட புயல் வீசப்போகுது... இல்லே. வானத்தில் ஒரு மேகங்கூட இல்லே... என்ன அது — சூரியன் கீழே இறங்கிக்கொண்டிருக்கா?

பாட்டி: ஜூலையில் சூரியன் வெப்பமா இருக்கு. அதாவது சாயங்காலமாகியும் இன்னமும் புழுக்கமா இருக்கு.

தான்யா: ஏற்கெனவே சாயங்காலமாகி விட்டதா, பாட்டி? (சன்னலுக்கு வெளியே பார்க்கிறாள்.) என்ன விநோதமான ஆள் தெருவிலே போய்க் கொண்டிருக்கான் – வெள்ளைக் காற்சட்டையும், தோளின் மீது ஒரு மண்வாரியும். அந்த மண் வாரியை அவன் எதுக்காக விரும்புறான்? இப்ப அது வழக்கமில்லாத ஒன்று.

பாட்டி: அமைதியா இரு. தத்யானா அலெக்ஸே யெவ்னா... எல்லாமே சரியாப் போயிரும்... நீ நல்லா இருக்கிற வரை, அவன் சரியா இருப் பான், கடவுள் விருப்பம்.

தான்யா (அமைதியாக): நான் கவலைப்படலே. இவன் சாக மாட்டான். அவனால் சாக முடி யாது.

அமைதி.

ஷிர்யாயெவ் குடும்பத்தினர் சன்னல்களைச் சுத்தம் செய்துகொண்டிருக்காங்க. செம்பட்டை நிறத் தலைமுடியைக் கொண்ட அச்சிறுவன் யாரோட பையன்? அவனை இதற்கு முன் னாலே நான் பார்த்ததே இல்லை.

தூஸ்யா (அடுத்த அறையிலிருந்து வந்து கொண்டு): வா, தான்யா. அவன் திரும்பவும் மோசமாகிட் டான்...

தான்யா (உறுதியோடு): பரவாயில்லே, பரவாயில் லே... (அடுத்த அறைக்குச் செல்கிறாள்.)

தூஸ்யா: பாட்டி, என்ன இது? அவன் செத்துக் கிட்டிருக்கான், அவளோ இதை நம்ப மாட்டா. அழக் கூடச் செய்யலே. (தனது கண்ணீரைத்

துடைத்துக் கொண்டு.) இது சரியில்லையே, பாட்டி.

பாட்டி: நீ அறியாத பெண். இவளுக்கு வாழ்க்கையில் உள்ளதெல்லாம் யூரி தான். அவன் இறந்து போனா, அவளுக்கு எதுவுமே மிஞ்சி இருக்காது. ஒருத்தராலே எங்ஙனம் அதை நம்ப முடியும்? அவள் இவ்வாறு கருத முடியாது, தூஸ்யா.

இடைவெளி.

தூஸ்யா: பாருங்க... அலோஷா ஒரு குறிப்பு அனுப்பினான்: இரண்டாவது பாடத்தை நான் தவற விட்டுட்டேன்... ஏன் அது அப்படி இருக்கு? இது எல்லாமே தப்பு, பாட்டி.

பாட்டி: இதெல்லாம் சரிதான்: சிலர் உயிர் வாழ்றவுங்களும், அடுத்தவங்க இறந்து போனவுங்களும். (அடுத்த அறைக்குப் போகிறாள்.)

கதவில் தட்டும் ஓசை. டாக்டர் நுழைகிறார்.

டாக்டர்: வணக்கம்.

தூஸ்யா: ஒரு நிமிஷம். நான் சொல்றேன்... (கதவிடம் செல்கிறாள்.) தான்யா, டாக்டர் இதோ இருக்கிறார்.

தான்யா நுழைகிறாள். டாக்டரை அமைதியாகப் பார்க்கிறாள்.

டாக்டர்: சரி, எப்படியிருக்கு? அவனுக்கு ஈரக் கட்டு போட்டீங்களா?

தா ன் யா (மெதுவாக): இல்லை... பேராசிரியர் காலையிலே இங்கிருந்தார், டிப்தீரியா என்று இனங் கண்டார்...

அமைதி.

டாக்டர்: உங்களுக்கு மறுப்பு இல்லேன்னா, நான் போய் அவனைப் பார்க்கிறேன்...
தா ன் யா: இல்லை, வேணாம்... நானே சமாளிச்சிருக்கிருவேன்... நானாகவே எல்லாத்தையும் பார்த்துக்கிருவேன்... மூன்று நாளைக்கு முன்னாலே டிப்தீரியான்னு பார்த்தேன் — நினைவிருக்கா? போயிட்டு வாருங்கள், டாக்டர்... தேவையில்லே!.. முதலாவதா புரிஞ்சுக்கிட்டது நான் தான், எல்லாத்தையும் நானே பார்த்துக் கிருவேன்.
டாக்டர்: என்னை நம்புங்க, நியாயத்திற்குப் புறம்பா நீங்க போய்க்கிட்டிருக்கீங்க.
தா ன் யா: போங்க, டாக்டர்.
டாக்டர்: நீங்க தவறு செய்துக்கிட்டிருக்கீங்க...
தூ ஸ் யா: அது டாக்டரோட தப்பில்லே! நீ ஏன் இப்படி நடந்து கொள்கிறாய், தான்யா?
தா ன் யா (கத்துகிறாள்): வெளியே போங்கள்! நீங்க எல்லாருமே வெளியே போங்கள்!

டாக்டர் அறையை விட்டு நகர்கிறார். தூஸ்யா அவரைப் பின்தொடர்கிறாள்.

அவன் உயிர்வாழத்தான் போறான்... அவனுக்கு டிப்தீரியா கண்டிருக்குன்னு முதலாவதா ஊகம்

செய்ததே நான்தான். என்னா[illegible] இதன் அருத்தம்... எப்படின்னு [illegible] யும். இல்லே, இல்லே, அவன் [illegible] இல்லே. அவனாலே சாக முடியாது [illegible] எல்லாத்தையும் பார்த்துக்கிருவேன். [illegible] மேலுங்கீழுமாக நடைபோடுகிறாள். [illegible] ரியாவுக்கு மருத்துவ சிகிச்சை... [illegible] மருத்துவ சிகிச்சை பொதுவானது... [illegible] என இரண்டாப் பிரிக்கப்பட்டிருக்கு... [illegible] முறைக்குப் பயன் படுத்த... தல முறைக்கு...'' (மேலுங்கீழும் நடக்கிறாள்.) நான் மறந்து போய்ட்டேன். எல்லாத்தையும் நான் மறந்து போய்ட்டேன். இதென்னடா? எனக்கு ஒரு பொருளும் நினைவுக்கு வரலே... (மேசைக்கு ஓடுகிறாள், குறிப்பேடுகள் கத்தையை எடுக்கிறாள்.) இதோ இருக்கிறது, 1933 ஆண்டு... (பரபரப்புற்றவளாய் பயிற்சி ஏடுகளின் பக்கங்களைப் புரட்டுகிறாள்.) பராடைபஸ்... இல்லை, அது இல்லை. (குறிப்பேட்டை பக்கத்தில் எறிகிறாள்.) இங்கிருக்கு. ''உரை எண். 3, மே 5, 1934.'' (உரக்கப் படிக்கிறாள்.) ''டிப்தீரியா... தொண்டையில் அழற்சி... ஜெர்மன் நுண்கிருமி ஆராய்ச்சியாளர் லெஃப்ளேரால் சிறப்பாக ஆராய்ச்சி செய்யப்பட்ட நோய் நுண்மம் அசையாத சற்றே வளைந்த கழி வடிவக் கட்டமைவு... பார், மீஷா, பேராசிரியருடைய மீசை கடற்குதிரையினுடையதைப் போலவே இருக்கிறது.'' என்ன இது?

பாட்டி (கதவு வழியில்): யூரியிடம் போ, தத்யானா.

தான்யா: என்னைத் தனியே விடுங்க. இப்போ... போங்க, பாட்டி!

பாட்டி வெளியேறுகிறாள். தான்யா தொடர்ந்து பக்கங்களைப் புரட்டுகிறாள்.

''உரை எண். 4, மே 8, 1934.'' இதோ... இதோ... ''டிப்தீரியாவுக்கு மருத்துவ சிகிச்சை...'' உரைக் குறிப்பு இல்லை. இதென்ன? ஏன் அப்படி? உரைக் குறிப்பு இல்லை.

பாட்டி நுழைகிறாள். தான்யாவிடம் போகிறாள்.

பாட்டி (உறுதியுடன்): வா, தத்யானா அலெக்சேயெவ்னா.

தான்யா: என்ன?

பாட்டி (மெதுவாக): வா, தான்யா...

தான்யா (குறிப்பேட்டைப் பார்த்துக்கொண்டே): நான் மறந்தே போயிட்டேன்... ஒன்னைக்கூட என்னாலே நினைவுபடுத்த முடியவில்லே... எல்லாத்தையுமே மறந்துபோனேன்... (பாட்டியுடன் அடுத்த அறைக்குச் செல்கிறாள்.)

கதவு மணி ஒலிக்கிறது. மகிழ்ச்சி நிறைந்த கிரீஷ்சென்கோவுடன் ஓல்காவும் பின்தொடர தூஸ்யா நுழைகிறாள். ஓல்கா கவர்ச்சியான பெண். கிரீஷ்சென்கோ மலர்க் கொத்தைக் கையில் ஏந்திக்கொண்டிருக்கிறான்.

கிரீஷ்சென்கோ: சொல்லுங்க—அந்திரேய் தராஸவிச்... தத்யானா அலெக்சேயெவ்னாவுக்கு

நான் யார் என்பது தெரியும்.

தூ ஸ் ய ா: கணப் பொழுதுக்கு மட்டும் உட்கா ருங்க... (தயங்குகிறாள்.) நல்லது, நான் அவ ளிடம் சொல்றேன். (அடுத்த அறைக்குச் செல் கிறாள்.)

ஓ ல் க ா: என்ன குழப்பம்...

கி ரீ ஷ் செ ன் கே ா: அவர்கள் நகர்ந்து கிட்டே இருக்கணும், அல்லது இங்கே ரிப்போர். (திடீ ரென்று ஓல்காவை முத்தமிடுகிறான்.)

ஓ ல் க ா: உனக்குப் பைத்தியம் பிடிச்சிருச்சு, அந்தி ரேய்.

இருவரும் சிரிக்கின்றனர்.

கி ரீ ஷ் செ ன் கே ா: ஆமாம், நான் பைத்தியக் காரன்தான். திருமணப் பதிவு அலுவலகத்தில் வேடிக்கையா இருந்தது. ஒரே கூட்டம், எல்லாரு மே திருமணம் செய்துகொள்கிறாங்க.

ஓ ல் க ா: இருந்தாலும் அந்தச் சோபாவை எங்க அறையில் நான் இன்னும் கொஞ்சம் சன்னல் பக்கம் நகர்த்துவேன். ஆனா சின்ன அலமாரியை அடுப்பு இருந்த மூலைக்கே நகர்த்துவேன்.

கி ரீ ஷ் செ ன் கே ா: சின்ன அலமாரியை என்ன செய்யணும்னு விரும்புறியோ அப்படிச் செய். ஆனா மேசையை மட்டும் தொடதே. அது என்னுடைய ஆட்சி எல்லைக்குட்பட்டது.

ஓ ல் க ா: நானில்லாமல் எதையுமே நகர்த்த வேணாம், கேட்கிறாயா? அப்புறம் இலையுதிர் காலத்தில் நான் திரும்பி வருகிற போது...

கி ரீ ஷ் செ ன் கே ா: இரயில் நிலையத்திலிருந்து நக

ரத்திற்கு என்னோட கையிலே உன்னைத் தூக்கிப் போவேன். நமது வீட்டுக்கு வெளியே என்னோட நண்பர்களை வரிசையாக நிற்க வைப்பேன். அவர்களும் ஒரே குரலில் ''அந்திரேய் தராஸவிச்சின் மனைவி நீடூழி வாழ்க!'' என்று கத்துவார்கள்.

ஒல்கா: பிறகு நாம கதவைச் சாத்திக்கிட்டு மூனு நாளைக்கு உள்ளுக்குள்ளேயே இருப்போம்.

*அவர்கள் முத்தமிடுகிறார்கள். வாசல் வழியில் தான்யா அமைதியாகத் தோன்றுகிறாள். அவர்கள் முத்தமிடுவதை மௌனமாகப் பார்க்கிறாள். இவள் அவர்களைப் பார்க்காதது போல, எந்தவித வியப்பையும் காட்டவில்லை.*

கிரீஷ்சென்கோ (உணர்ச்சியோடு): இதோ, தத்யானா அலெக்சேயெவ்னா... இது அவள் தான்... எப்போதோ இவளைக் கூட்டி வருவதா நான் வாக்களித்திருந்தேன். இவள் எப்படிப்பட்டவள் இப்ப நீங்களே பார்க்குறீங்களா? இது ஒல்கா. இவளைப் போல யாருமே இல்லை. எங்கேயும் இல்லை.

ஒல்கா: நிறுத்து, அந்திரேய். (தான்யாவிடம்.) உங்களைப் பத்தி அந்தளவுக்கு என்னிடத்திலே நிறையச் சொல்லி இருக்கிறான்... பாருங்க, உங்களோட அமைப்புப்படங்கள் தாம் இவனுக்கு அதிர்ஷ்டத்தைத் தந்ததுன்னு சொல்றான்... இந்த முறையில் இருக்கிறான்: மூடநம்பிக்கையுள்ளவன், புகழ்பெற்றவன், அருமையானவன்...

கிரீஷ்சென்கோ: இன்னைக்குத்தான் ஒருவழியாக நாங்க... திருமணப் பதிவு அலுவலகத்தி

லிருந்து உங்களைப் பார்க்கிறதுக்காக நேரடியாக வந்திருக்கோம்... இன்னைக்கு நாங்க திருமணம் செய்துக்கிட்டோம்... அவர்கள் எங்களுக்கு ஒரு துண்டுக்காகிதத்தைத் தந்தாங்க. அதில் தான் எங்களோட வியப்புக்குரிய மகிழ்ச்சி இரண்டு முத்திரைகள் மூலம் உறுதிசெய்யப் பட்டிருக்கு.

தான்யா: அப்படியா?

ஓல்கா: நாளைக்கே நாங்க பிரிஞ்சுருவோம். நான் பெலோருஷ்யக் குடியரசுக்கு மூன்றுமாத செய்முறைப் பயிற்சிக்காக புறப்படுகிறேன்.

இடைவெளி.

தான்யா: மன்னிக்கணும்... (கூச்சத்தோடு.) உண்மை என்னன்னா யூரி... கொஞ்சம் முன்னாலே இறந்து போனான்.

இடர்ப்பாடான அமைதி.

கிரீஷ்செங்கோ: வருத்தப்படுறேன், தான்யா... எனக்குத் தெரியாது... நான்...

தான்யா: பரவாயில்லே.

ஓல்கா (மெதுவாக): ஒருவேளை உங்களுக்கு ஏதாவது தேவைப்படுதா? நாங்க உதவி செய்யுறோம், இல்லையா, அந்திரேய்?

தான்யா: இல்லே. இப்ப எனக்கு எதுவும் தேவையில்லே. (பாசத்தோடு.) நீங்க போயிட்டு வாருங்கள். ஏற்கெனவே சாயங்காலமாச்சு போலத் தெரியுது...

கிரீஷ்சென்கோவும் ஒல்காவும் பூக்களை மேசையின் மீது வைத்து விட்டு, மௌனமாக வெளியே செல்கிறார்கள்.

(சிந்தித்தபடி.) பெலோருஷ்யாவுக்கு... அங்கே தான் ஜேன்யா இருக்காள், பெலோருஷ்யா வில்... அங்கே தீப்பெட்டி தொழிற்சாலைகள் இருக்கின்றன.

தூஸ்யா பின் தொடர அடுத்த அறையிலிருந்து பாட்டி நுழைகிறாள்.

பாட்டி: தான்யா, அன்பே...

தான்யா: எதுவும் சொல்ல வேண்டாம். நான் தனிமையில் இருக்க விரும்புறேன். முழுமையாக. எனக்கு யாரும் தேவையில்லே.

பாட்டியும் தூஸ்யாவும் மௌனமாக வெளியே செல்கிறார்கள். அறையில் அமைதியாக இருக்கிறது. வெளியே இருட்டிவிட்டது. பக்கத்து வீடுகளில் விளக்கு கள் எரியத் தொடங்கின. அதிகத் தொலைவில் லாதபடி தோட்டத்தில் எங்கோ ஓரிடத்தில் மகிழ்ச்சி யுள்ள குழு ஒன்று தங்கியிருந்து, பாடிக் கொண்டிருக் கிறது. கித்தார் நரம்புகளின் இசையைக் கேட்க முடிந்தது:

''பாதை எல்லாம் மண்டிக் கிடக்குது
என் அன்பன் போன பாதமெல்லாம்
பாசியும் புல்லும் நிறஞ்சு போச்சுது...''

தான்யா சன்னலுக்குப் போகிறாள், பலகணி அடிக்கட் டையில் அமர்கிறாள். வெளியே ஒரு கடிகாரம் மணி

அடிப்பதைக் கேட்க முடிகிறது, பதிலளிப்பது போல இரண்டாவது கடிகாரமும், பின்னர் மூன்றாவது கடிகாரமும் ஒலிக்கின்றன. விளக்குகள் அணையத் தொடங்கின. இரவு விழுந்து கொண்டிருக்கிறது. தான்யா திறந்த சன்னலருகே அமைதியாக அமர்கிறாள். இடிமின்னல் எங்கோ பக்கத்தில் கேட்கிறது. இரயில்கள் தொலைவில் இரைகின்றன. திரும்பவும் கடிகாரங்கள் ஒலிக்கின்றன. தான்யா மௌனமாக உட்கார்கிறாள். சேவல்கள் கூவுகின்றன. சன்னலில் தெரியும் வானம் ரோஜா வண்ணச் சிவப்பாக மாறிக்கொண்டு வருகிறது. ஆக இரவு கடந்துவிட்டது. இது புலர் காலை. வெளியே பறவைகள் பாடுகின்றன. சூரியன் எழுகிறது. தொலைவில் மின்சார ரயிலின் உறுமல் ஒலி கேட்கிறது. தான்யா மெதுவாகத் தன் தலையை நிமிர்த்தி தெருவைப் பார்க்கிறாள். எதிரொலி செய்கின்ற ஒரு மனிதனின் குரலைக் கேட்க முடிகிறது: ''தூஸ்யா, தூஸ்யா, பாடத்திற்கு நேரமாகிவிட்டது...'' எங்கோ அருகில் ஒரு வானொலி காலைப் பயிற்சிகளை ஒலிபரப்பிக் கொண்டிருக்கிறது: ''தொடங்கவும். ஒன்று, இரண்டு, மூன்று. ஒன்றில் மூச்சை இழுக்கவும், மூன்றில் மூச்சை வெளிவிடவும். ஆழமாக மூச்சிழுக்கவும்... மேலும்... மேலும்... ஒன்று, இரண்டு. இப்பொழுது முதலிலிருந்து தொடங்கவும்... ஆரம்பத்திலிருந்து தொடங்கவும்...'' சூரியனின் முதலாவது கற்றை அறைக்குள் விழுகிறது. மேல் மாடியில் எங்கோ பியானோவில் ஏதோ துக்கடாப் பாட்டு பாடப்படுகிறது. காலை வந்துகொண்டிருக்கிறது.

திரை.

# இரண்டாம் பாகம்

## காட்சி ஐந்து

*மே இருபத்தாறு, 1938.*

*தைகாவில் சாலையோரத்து ஒரு குளிர்கால விடுதி. குடிசையின் நடுவில் ஒரு பெரிய இரும்பு அடுப்பு இடம் பிடித்திருக்கிறது. அதன் அருகே மரத்தாலான இரண்டு அடுக்குப் பலகைப் படுக்கைகள் இருக்கின்றன. அதற்குச் சற்று தள்ளி வீட்டுச் சொந்தக்காரியின் பகுதி, அது பூக்களிட்ட திரையால் மறைக்கப்பட்டிருக் கிறது. தனது கைகள் மீது தலையை வைத்தபடி இக்னாதவ் மேசை முன்னர் அமர்ந்து தூங்கிக் கொண்டிருக்கிறான். மேசையின் மீது மண்ணெண் ணெய் விளக்கு ஏற்றப்பட்டிருக்கிறது. இடை வழிப் பயணிகள் அடுக்குப் பலகைப் படுக்கைகளிலே இர வைக் கழித்துக் கொண்டிருக்கிறார்கள். அரை குறை வெளிச்சத்தில் மூன்று அறிமுகமில்லாதவர்கள் கீழே தூங்குகின்றனர். அவர்களுக்கு மேலே மிகப் பருமனான, சுறுசுறுப்புமிக்க, அறியும் அவாமிக்க வாசின் என்கிற மனிதன் திரும்பித்திரும்பிப் புரண்டு படுத்துக் கொண்டிருக்கிறான். அவனுக்குத் தூக்கம் பிடிக்கவில்லை. இரவு நேரம் கிட்டத்தட்ட முடிந்து*

*விட்டது. இடிமின் புயல் வெளியே அடிக்கிறது. மின்னல் ஒளி சன்னலுக்கு வெளியே நன்கு காணக் கூடியதாக இருக்கிறது.*

*வாசின்:* இல்லை... என்னால தூங்க முடியாது! என்னால தூங்க முடியாது, பாழாய்ப் போகட்டும்! என்னால எந்த ஓய்வும் எடுக்க முடியாது. *(தனது கடிகாரத்தைப் பார்க்கிறான்.)* சே!.. என் கடிகாரங்கூட நின்னு போச்சு... இது இரவா காலையா என்பது கடவுளுக்குத்தான் தெரியும்.

*திரைக்குப் பின் புறமிருந்து வீட்டுக்காரி வருகிறாள். அடுப்பில் முனைப்பாக வேலை தொடர்கிறாள்.*

நேரம் இப்ப என்ன, வீட்டுக்காரியே?

*வீட்டுக்காரி:* தூங்கு, தூங்கு, என் அன்பே. ஐந்துதான் ஆகுது. இன்னும் வெளிச்சங்கூட வரத் தொடங்கலே.

*ஒரு பலமான இடிமுழக்கம்.*

*வாசின்:* இங்கே என்ன, தூங்க முடியுமா, பார்! இந்த உலகத்தை எதுக்காக நான் சுற்றித்திரிகிறேன் என்று சாத்தானுக்குத்தான் தெரியும். த்னெப்ரபெத்ரோவ்ஸ்க் நகரத்தில், என் வீட்டில் சன்னலுக்கருகே உட்கார்ந்துகொண்டு, தெருவில் போய்வரும் ஆட்களைக் கவனித்துக்கொண்டு தேநீர் குடிக்க முடியும். ஆனா ஐயோ! நான் இனி

மேல் அலுவல் பயணங்கள் காரணமா ருஷ்யா வின் ஒரு மூலையிலிருந்து மற்றொரு மூலைக்கு அலைந்து திரியேன்! இதோ இங்கே ஒரு குடிசைக் குள்ளாக, ராத்திரி முழுக்க, தைகாவில், மழை கொட்டுக்கொட்டுன்னு கொட்டுது, நான் படுத் திருப்பது சாத்தானுக்குத்தான் தெரியும்... பக்கத் திலுள்ள ஒரு விடுதியிலே ஒரு கரடி ஒருத்தனை சின்னாபின்னப் படுத்திக் கொன்றது என்று நேத்து எங்கிட்டச் சொல்லிக்கிட்டிருந்தாங்க. இல்லை, எனக்குச் சொல்லு – இது போல உலகத் தில் நான் எதுக்காகச் சுத்தித் திரியணும்?

வீட்டுக்காரி: ஒருவேளை நீ சுறுசுறுப்பானவனாக இருக்கிறது காரணமா இருக்கலாம்.

வாசின்: அதுவே தான்! சுற்றித் திரிகிற ஆள் நான், புரிஞ்சுக்கிட்டாயா? ஓர் அலுவல் பயணப் பணியை நான் தேர்ந்தெடுத்தேன், ருஷ்யா முழுவதும் நான் பயணம் செய்றேன். நான் ஒரு பிரம்மச்சாரின்னு நீ நினைக்கலாம்? ஆனா நான் அப்படி இல்லே, நான் திருமணம் ஆனவன்! ஓ, என்ன வேதனை, என்ன வேதனை... நான் வீட்டிற்குப் போறேன், அங்கே ஒரு வாரம் தங்கு றேன், சலிப்பு ஏற்படுது, திரும்பவும் சாலையில் பயணத்திற்காகக் கிளம்புறேன். பயணம் போறது எனக்குப் பிடிச்சிருக்கு. அப்படிப்பட்ட மனிதன் நான் – ஒரு முட்டாள்.

வீட்டுக்காரி: உன்னையே வருத்திக்கொள்வதை நிறுத்து. தூங்கப் போ, அன்பே.

வாசின்: இல்லே, இப்ப எனக்குத் தூக்கம் வராது. ஏதாவது இசை இருந்தால், தூங்கிப் போவேன். இசை நேரடியாக எனக்குத் தூக்கத்தைத் தரு

கிறது. (சற்று நேர அமைதிக்குப் பிறகு.) ஏன் நீயே தூங்காம இருக்கிறாய்?

வீட்டுக்காரி: என் மகள் உடல்நலமில்லாம இருக்கா.

வாசின் (தெளிவற்றபடி): ஆமாம், எட்டாக் கையிலுள்ள இடம்... சாலை ஓரத்தில் ஒரு வீடு, சுற்றிலுமோ டஜன் கணக்கான கிலோமீட்டர்களுக்கு மனிதக் குடியிருப்புகளே இல்லை. (அமைதிக்குப் பிறகு.) நீயோ இங்கே ரொம்பக் காலமா வசிக்கிறாயா?

வீட்டுக்காரி: என்னால் நினைச்சுப் பார்க்கக் கூடிய காலமா. என்னோட குடும்பத்திலிருந்து என் அப்பா மட்டுந்தான் இருக்கிறார். ஆக, நாங்க மூன்று பேர் சேர்ந்து வாழ்றோம் — நான், கிழவர் அப்புறம் என்னோட சின்ன மகள்.

வாசின்: அப்படியா! நீ இன்னமுங்கூட இளமையாகத்தான் இருக்கிறாய். உனக்குச் சலிப்பு ஏற்படலியா?

வீட்டுக்காரி: ஏன் சலிப்பு?

வாசின்: பாரு, நீ எப்படிப்பட்டவள்... ஆச்சரியமான பெண்.

வீட்டுக்காரி: நான் ஏன் சலித்துப்போகணும்? தைகாவில் எனிஸேய் நதியிலிருந்து தங்கச் சுரங்கங்கள் வரை முழுக்கவும் எங்களோட சாலை ஒன்னே ஒன்னு தான். ஒவ்வொரு ராத்திரியும் என் வீட்டிலே கடந்து போற புதிய ஆட்கள் இருக்கிறார்கள்... ஒவ்வொருத்தருமே — அதை எப்படிச் சொல்றது — தங்களோட சொந்த வரலாற்றைக் கொண்டிருக்காங்க, அல்லது அதை நீ

எந்த மாதிரி சொல்ல விரும்பினாலும் சரி. ராத்திரியிலோ, உண்மையா, சாத்தான் மனிதனின் நாக்கை இழுத்துக்கொள்கிறது. மனிதன் அமைதியா இருக்கவே விரும்புவான், ஆனா அவனால முடியாது. ஆகவே அவனுக்குத் தேவை எல்லாம் தன்னைப் பத்திப் பேசுறதுதான், அந்நியனிடத்தில் தன் உள்ளத்தைக் கொட்டுறதுதான். வேறு ஒன்னுமே வேண்டாம். என் அன்பே, நீ கற்பனை செய்து பார்க்க முடியாத அளவுக்கு எனக்கு வாழ்க்கை பற்றித் தெரியும்.

பலமான இடியோசை கேட்கிறது.

வாசின்: இயற்கை கரூரமாயிருக்கு. (இடைவெளி.) இடிமின் புயலுக்கு நான் ரொம்பவும் பயப்படுறேன். ராத்திரியிலே மின்னல் வெட்டியபோது நான் சாலையில் இருக்கேன் என்றால் சுத்தமா அச்சத்தாலே நடுநடுப்போயிட்டேன். (நினைக்கிறான்.) ஆனா உண்மையிலே, நான் துணிச்சல்கார மனிதன்!

வீட்டுக்காரி: நீ கொஞ்சமாவது தூங்கியாகணும்...

வாசின்: எப்படித் தூங்க முடியும்!.. எனக்கு மோசமான மனைவி வாச்சிருக்கான்னு நீ நினைக்கலாம்? அம்மாதிரி எதுவும் இல்லை. என் மனைவி ரொம்ப அன்பானவள், ரொம்ப அழகானவள்... (கண நேரத்திற்கு ஆழ்ந்து சிந்திக்கிறான், மீண்டும் படபடக்கிறான்.) ஏ, வீட்டுக்காரியே, மேசையின் அருகே தூங்குகிற அந்த ஆள் யார்? தாளை வெளியே எடுத்து எழுதிக்கிட்

டிருந்தான், பிறகு திடீரென்று மயங்கி விழுந் துட்டான்.

வீட்டுக்காரி: அவன் ஒரு விசேஷமான ஆள். மாவட்டம் பூராவுக்கும் தலைவன். அரசாங்க ஆள்.

வாசின்: ஓகோ, அப்படியா? அவனைப் பலகைப் படுக்கையில் நீ ஏன் வைக்கக்கூடாது?

வீட்டுக்காரி: அவனோட கார் உடைஞ்சுபோச்சு. ரொம்பச் சீக்கிரத்திலேயே ஓட்டுநர் அதைச் சரிப்படுத்திருவான்னு நினைச்சான், ஆனா ராத் திரி முழுக்க அது வேலை வாங்கிருச்சு. (வெளியே கேட்கும் தெளிவற்ற ஓசையைக் கேட்கிறாள்.) யாரோ குதிரையில் பயணம் செய்யுறாங்க போ லிருக்கிறது... தேவா, தைகாவிலே இது போல ராத்திரியிலே குதிரையில் பாய்ஞ்சு வருறது யாரா இருக்கும்?

வாசின்: என்னைப் போன்ற அலுவல் பயணிகள் சுறுசுறுப்பா இருப்பாங்க, தெரியுமா?

கதவைத் தட்டும் உரத்த ஒலி கேட்கிறது.

வீட்டுக்காரி: இப்படித்தான், எங்களுக்குத்தான். (கதவுக்குச் சென்று அதைத் திறக்கிறாள்.)

மழை பெய்யும் ஓசை, காற்று வீசும் இரைச்சல்.. தான்யா வந்து கொண்டிருக்கிறாள், ஒரு பிரகாசமான மின்னல் அவளது வருகையைக் காட்டுகிறது. பழகியறியாத வெளிச்சத்திற்கு எதிராக அவள் தனது கண்ணைச் சுரிக்கிறாள், சுற்றிலும் பார்க்கிறாள். அவள் தலைமுடி தாறுமாறாகக் கிடக்கிறது, முகத்தில் மழைத்துளிகள் தெறித்துவிழுகின்றன.

*தான்யா:* இதோ நல்லது, நாம் வந்துட்டோம்... வணக்கம்!

*வீட்டுக்காரி:* தான்யா, என் அன்பே! இந்த மாதிரி பருவநிலையில் ஏன் வந்தாய்?

*தான்யா (தனது மேற்சட்டையைக் கழற்றிக் கொண்டு உடையைத் தட்டி உதறிக்கொள் கிறாள்):* இங்கு வெதுவெதுப்பாகவும் அருமை யாகவும் இருக்கு... ரொட்டி வாசனை மணக் கிறது. ஐயோ, மிகவும் களைத்துப்போய் இருக் கேன்!

*வீட்டுக்காரி:* உன் ஜாக்கெட்டைக் கழற்று, அது ஈரமாக இருக்கு... இந்தா சால்வை போட் டுக்க. இது உனக்கு வெதுவெதுப்பாக இருக்கும்.

*தான்யா (சால்வையால் தன்னைச் சுற்றிக்கொண்டு, அடுப்புக்கு அருகே உட்கார்ந்து கொண்டிருக் கிறாள்):* சின்ன ஓல்யா எப்படி இருக்கா?

*வீட்டுக்காரி:* ஓரளவு நல்லா இருக்கா... அவள் வியாதியினின்றும் தேறியிருப்பான்னு நினைக் கிறேன்.

*தான்யா:* நான் இவான்தேயிவ்ஸ்கி தங்கச் சுரங் கத்திலிருந்து வந்துக்கிட்டு இருக்கேன். அங்கே ஒருத்தருக்கு அவசரமா ஆப்பரேஷன் செய்ய வேண்டி இருந்துச்சு. ஆகவே திரும்புற வழியிலே உங்களைப் பார்க்க முடிவு செய்தேன். ராத்திரி யிலே என்னைத் தங்க வைக்கப் பார்த்தார்கள், ஆனா நான் மறுத்துட்டேன் – நேரத்தை வீணாக் குறதிலே என்ன அருத்தம் இருக்கு? நடு ராத்தி ரிக்குப் பிறகு கிளம்பினேன், புயற்காற்றில் அகப் பட்டேன்... கிட்டத்தட்ட பாதையைத் தவற விட்டுட்டேன், முட்ட நனைஞ்சு போனேன்...

வீட்டுக்காரி: கொஞ்சம் சூடான தேநீர் விரும்புகிறாயா?

தான்யா: இங்கு வருகின்ற வழி நெடுக அதைப் பத்தித்தான் நெனச்சுக்கிட்டிருந்தேன். கொஞ்சம் தா, இதற்கிடையில் ஓல்யாவை ஒரு பார்வை பார்த்துறேன். (திரைக்குப் பின்னால் போகிறாள்.)

வாசின்: இவள் ஒரு டாக்டர்ன்னு நினைக்கிறேன். கவர்ச்சியான பெண். இங்கு ரொம்பக் காலமா இருக்கிறாளா?

வீட்டுக்காரி: கிட்டத்தட்ட ஓராண்டுக்கு முன்னால் மாஸ்கோவிலிருந்து வந்தாள்... குளிர் காலத்திலே தனக்கு வழி காட்டுறதுக்காக ஒரு பையனைக் கூட்டிவந்தாள்: தைகாவில் தனியாக் குதிரையிலே போகப் பயப்பட்டாள். ஆனா இப்ப அவள் தெரிஞ்சுக்கிட்டாள்...

வாசின்: ஒவ்வொருத்தரும் தன்னுடைய சொந்தக் கதையை வைத்திருக்காங்கன்னு கொஞ்சம் முன்னாலே நீ சொல்லிக்கிட்டிருந்தாய். டாக்டரும் அது போல ஒன்னு வைச்சிருக்கணும். அவள் உன்னிடத்திலே சொல்லியிருப்பாள் என்று நெனக்கிறேன், இல்லையா?

வீட்டுக்காரி: அவளைப் பொருத்த வரையிலோ ஒன்னும் கதை ஏற்படலே... இன்னமும் இளமையாகவும், கவலையில்லாமலும் இருக்கா.

தான்யா (திரைக்குப் பின்னாலிருந்து வெளியே வருகிறாள்): அவள் தூங்கிப்போயிட்டாள். நான் அவளை உசுப்பலே. அவள் நாடித்துடிப்போ அருமையா இருக்கு. அவள் எழுந்தவுடன் அவளை முறையாகச் சோதித்துப்பார்ப்பேன்.

வீட்டுக்காரி: நீ படுத்துக் கொஞ்சம் ஓய்வெடுக்க விரும்புகிறாயா?

தான்யா: இல்லை, அவசியமில்லே. அது எனக்கு தளர்ச்சியை உண்டுபண்ணும்.

வீட்டுக்காரி: உன் இஷ்டம். (அவளுக்குத் தேநீர் கொடுக்கிறாள்.) இதோ, குடிச்சு வெதுவெதுப் பாக்கிக்க, என் அன்பே. (திரைக்குப் பின்னால் செல்கிறாள்.)

*அடுப்புக்கு அருகே தான்யா தன்னை வசதிப்படுத்திக் கொண்டு, இன்பத்தோடு தேநீர் அருந்துகிறாள்.*

வாசின் (சற்று இடைவெளிக்குப் பிறகு): என்ன ஆச்சரியம்! இடிமின் புயல் இதுபோல இருக்கும் போது பயணம் செய்ய நீங்க அஞ்சவில்லை என் பது என்னைக் குலுக்குது.

தான்யா (சுற்றிப் பார்த்துக்கொண்டு வாசினைக் கவனித்துக் கொண்டு): நான் பயப்படலே அவ் வளவுதான். (இடைவெளி.) நான் பயப் படலேன்னு உங்களுக்கு யார் சொன்னது, எந்த வகையிலும்? (மற்றுமொரு இடைவெளி.) நான் ரொம்ப நடுங்கிப் போகிறேன்.

வாசின்: உங்களோடு முற்றிலும் வெளிப்படை யாவே பேசுறேன், நானும் அப்படித்தான்.

தான்யா: நீங்க ஏன் தூங்கலே?

வாசின்: ஆர்வம் காரணமாகத்தான். சில வேளை களில் நமக்கு மிகுந்த களைப்பா இருக்கும், எந்தச் சக்தியும் நமக்கு எஞ்சியிருக்காது. ஆனா நாம் சிரமத்துடன் நிற்கிறோம், ஏனெனில் நெனக்கிறோம்: ஏதோ மிக ஆர்வமான

ஒன்னு நடக்கப் போவதா, ஆனா நாம் தூங்கிப் போயிட்டா என்ன? ஓகோ, முட்டாளாக இருப்போம்.

தான்யா (முறுவலிக்கிறாள்): நல்லது, ஆர்வமூட்டும் ஏதேனும் உங்களுக்கு ஏற்படுதா?

வாசின்: நிச்சயமாய்! எடுத்துக்காட்டா, இப்ப நான் தூங்கிப்போய் இருந்தா, உங்களை ஒரு போதும் பார்த்திருக்க முடியாது... அங்கே இருக்கும் மேசையின் அருகே தூங்கிப்போன ஆள் போலவே. அவன் விழித்தெழுகிறபோது உங்களை இங்கே காணோம்! நானோ எல்லாத்தையும் பார்த்தேன்: நீங்க உள்ளே வருவதையும், அமர்ந்து தேநீர் அருந்தியதையும், அப்புறம்...

தான்யா: அப்புறம் இன்னும் எதாவது ஒன்னும் பார்க்க மாட்டீங்க. நான் உள்ளே வந்திருக்கேன் சரி, தேநீர் அருந்துவதற்காக உட்கார்ந்திருக்கேன் சரி... ஆனா வேறு எதுவும் ஏற்படப் போறதில்லை. ஏதுமில்லே. (தேநீரை அருந்தி முடிக்கிறாள், எழுந்து நிற்கிறாள், அறையில் நடக்கிறாள்.) இங்கு அவ்வளவு அமைதியா இருக்கு... மழை கொட்டுறதைத் தவிர வேறெதுவும் இல்லே... இங்கு அவ்வளவு அமைதியா இருக்கு... இந்த உலகம் பூராவிலுமே யாருமே இல்லாதது போல, முற்றிலுமே நானும்... (வாசினைப் பார்த்துக் கொண்டிருக்கிறாள்.) உங்க பெயர் என்ன?

வாசின்: வாசின்.

தான்யா: ...முற்றிலுமே நானும் தோழர் வாசினும்.

வாசின்: ரொம்பச் சரி. செமியோன் செமியோன விச் வாசின், 'த்னெப்ரமேதல்' என்கிற டிரஸ்டின் பிரதிநிதி.

தான்யா: என்ன? செமியோன் செமியோனவிச்? (சிரிக்கிறாள்.)

வாசின்: அது சரிதான். ஏன் சிரிக்கிறீங்க?

தான்யா: வெறுமனே எனக்கு ஓர்... ஓர் அறிமுக மானவன் இருந்தான். அவன் பெயர்கூட செமி யோன் செமியோனவிச் தான். (திடீரென்று அவனை உற்றுப்பார்க்கிறாள்.) கேளுங்க, ஒருவ கையில் உண்மையாவே நீங்க அவனே தான், என்னவோ? (மீண்டும் சிரிக்கிறாள்.) சே, என்ன பிதற்றல்...

வாசின் (குழம்பிக் கொண்டிருக்கிறான்): உங்களை என்னால முழுசாப் புரிஞ்சுக்க முடியலே.

தான்யா: அது நல்லதுதானே. (மூலைக்குச் செல் கிறாள். அங்கே மென்மரப்பட்டையால் முடை யப்பெற்ற பாயினால் ஒரு பியானோ மூடப்பட் டிருக்கிறது.) விநோதம். ஒரு பியானோ... தை காவில் இடைவழிப் பயண நிலையத்தில் ஒரு பியானோ. (பாயைத் தூக்கிக்கொண்டு தயாரிப் பாளரின் பெயரைப் பார்க்கிறாள்.) பெக்ஸ் டைன்... வேடிக்கையானது...

வாசின்: அது ஒரு புகழ்பெற்ற நிறுவனம்.

தான்யா: ஆமாம், மிகவும் புகழ் பெற்றது... எனக்குப் பழக்கமானதுங் கூட.

வாசின்: உங்களது குழந்தைப் பிராயத்திலே ஒரு வேளை இதுபோல ஒன்னை நீங்க வாசித்தீர் களா?

தான்யா: ஆமா. குழந்தைப் பிராயத்திலேதான்.

அது மாஸ்கோவில், அர்பாத் தெருவிலே, ஒரு காலத்தில் அங்கே நாம் ஒன்னா வாழ்ந்தோமே, செமியோன் செமியோனவிச்.

வாசின்: உங்களிடத்திலே பிரமாதமா நகைச்சுவை உணர்வு இருப்பதை என்னால காண முடியுது.

தான்யா (முக்காலியை பியானோவுக்கு அருகே இழுத்துப் போட்டுக்கொண்டு, மூடியைத் திறக்கிறாள்): இப்பக்கூட நான் பயப்படுறேன்: நான் வாசித்து எவ்வளவோ காலமாச்சு, என் விரல்கள் விறைப்பா இருக்கு, அவை எனக்குக் கீழ்ப்படிய மறுக்குது. ('ஸ்காட்லாந்து பாடலின்' ஆரம்ப சுரங்களைத் தயக்கத்தோடு வாசிக்கிறாள். தொடக்கத்தில் கேட்க முடியாதபடி, இருந்தாலும் பிறகு உரக்கவும் நம்பிக்கையோடும் வாசிக்கிறாள். இரண்டாவது ஈரடிச் செய்யுளைப் பாடத் தொடங்குகிறாள்.)

''எத்தனை அருமை என்னரும் ஜெம்மி
அத்தனை அன்புடன் அவரும் எண்ணி!''

வாசினுடைய தலை தலையணை மீது கவிழ்கிறது, அவன் தூங்கிப் போகிறான். இக்னாதவ் மெதுவாகத் தனது தலையை உயர்த்துகிறான். தான்யாவைப் பெரு வியப்போடு உற்றுப்பார்க்கிறான், ஆனால் அமைதியாக உட்கார்ந்து இருக்கிறான், ஒரு கனவை அச்சுறுத்தித் துரத்துவதற்கு பயந்தது போல அசைவற்று இருக்கிறான். தான்யா பாடுவதை நிறுத்துகிறாள். கண நேரத்திற்கு அறையிலே அமைதி குடிகொள்கிறது.

இக்னாதவ் (மெதுவாக): அதை என்னால் புரிஞ்சுக்க முடியலே: உங்களைப் பத்தி நான் ஏன்

கனவு கண்டுகொண்டிருக்கேன்? (இடைவெளி.) இதற்கு முன்னே நீங்க இங்கே இல்லே. எங் கிருந்து வந்தீங்க?

தான்யா: நான்... நான் வந்தேன்.

ஒரு பலமான இடியோசை.

இக்னாதவ்: இதற்கு நீங்கள் சரியான பருவநிலை யைத் தேர்ந்தெடுத்திருக்கிறீங்க. (இடைவெளி.) பெரிய பியானோவை ராத்திரியிலே எதுக்காக நீங்க வாசிக்கிறீங்க, களைப்புற்ற ஆட்கள் அழ் ந்து தூங்கிக்கிட்டிருப்பதை நிறுத்துறீங்க?

தான்யா (இக்னாதவ் கேலி பேசுகிறானா, கண் டிப்பாகப் பேசுகிறானா என்பதை இன்னமும் அறிந்து கொள்ள முடியாமல்): இது ஒன்றும் பெரிய பியானோ இல்லை, பியானோ தான்...

மற்றுமொரு இடியோசை.

வியப்பாக இருக்குன்னு தான் கூறணும்: இடி உங்களைச் சங்கடப் படுத்தலே, ஆனா இசை முழங்குது...

இக்னாதவ் (திடீரென்று மிகவும் நட்புப் பாராட்டும் முறையில்): இப்ப நான் எதைப் பற்றிக் கனவு கண்டேன் என்று உங்களுக்குத் தெரியுமா? என் தாயாரைப் பார்க்கிறதுக்காக நான் கிரஸ் னயார்ஸ்க் போயிருந்தேன்... அவள் கட்டித் தழுவி என்னை முத்தமிட்டாள், பிறகு எனக்கு ஒரு சின்ன கண்ணாடிப் பெட்டி கொண்டு

வந்து சொன்னா: ''அலெக்சேய், உனக்காக நான் கொண்டு வந்திருக்கும் இந்தப் பரிசைப் பார்...'' பிறகு அவள் பெட்டியின் மூடியைத் திறந்தாள், அதிலிருந்து இசை வெளிவந்தது, நீங்க வாசித்துக்கொண்டிருந்தது போலவே. (இடைவெளி.) நீங்க ஒரு இசைக் கலைஞரா?

தான்யா: இல்லே, நான் ஒரு டாக்டர்.

இக்னாதவ்: மாவட்ட மருத்துவ மண்டலத்திலே வேலை செய்றீங்களா?

தான்யா: அப்படியும் இல்லே. கோல்ட் டிரஸ்டிற்காக நான் பயணமுறை டாக்டராக இருக்கேன்.

இக்னாதவ்: உண்மையாவா?.. (ஆர்வத்தோடு அவளைப் பார்க்கிறான்.) நீங்க களைப்பா இருக்கீங்கன்னு நினைக்கிறேன், இல்லையா?

தான்யா: ஆம். இது சுலபமான பணி இல்லே.

இக்னாதவ்: நீண்ட காலமாகத் தொழில் செய்றீங்களா?

தான்யா: சும்மா ஓராண்டாத்தான்.

இக்னாதவ்: இதுக்கு முன்னனே உங்களைப் பார்க்காதது ஆச்சரியமா இருக்கு.

தான்யா: ஒருவேளை நீங்க தகுதியாகவும் நன்றாகவும் இருக்கீங்க. நானோ நோயாளிகளுக்குத்தான் அதிகம் செய்ய வேண்டி இருக்கு.

இடைவெளி.

இக்னாதவ்: உண்மையில், நீங்க மாஸ்கோவிலிருந்து வந்திருக்கீங்களா?

தான்யா: உங்களுக்கு எப்படித் தெரியும்?

இக்னாதவ் (முறுவலித்துக்கொண்டு): பார்க்கிறேன்.

(இடைவெளி.) மாஸ்கோ ஞாபகம் வந்துவிட்டதா?

தான்யா: இல்லை.

இக்னாதவ்: ஏன் இப்படி?

தான்யா: எனக்குத் தெரியாது, அப்படித்தான்.

இக்னாதவ்: மன்னிக்கவும், ஆனா நான் உங்களை நம்பலே. நான் இங்கு வளர்ந்தவன், இந்தப் பகுதிகளை நான் விரும்புறேன், ஆனா எனக்குங்கூட மாஸ்கோ நினைவு வந்துருச்சு. அடிக்கடி என்னால் தூங்க முடியிறதில்லே, கண்ணை மூடிக்கிட்டு என்னோட இளமைப் பிராயத்தை நினைச்சுப்பார்க்கிறேன்: த்வெர்ஸ்கோய் புல்லிவர்த், இன்ஸ்டிடியூட் விடுதி, பாலிடெக்னிக் அருங்காட்சியகம்... மேடையிலே விளதீமிர் மயக்கோவ்ஸ்கி...

''முன்னேறுவோம், முனைப்போடு!
உரை நிகழ்த்தும் பேனை விட்டு விலகியே!''
ஆமாம்... இளமை... (தான்யாவைப் பார்த்துக் கொண்டு.) அந்நேரத்திலே நீங்க மேசைக்குக் கீழே ஊர்ந்துக்கிட்டிருந்தீங்க.

நம்பிக்கையில்லாதபடி தான்யா அவனைப் பார்க்கிறாள்.

(புன்னகையுடன்.) இல்லே, மாஸ்கோவை மறப்பது என்பது கஷ்டமானது. (உணர்வோடு.) நினைச்சுப்பாருங்க — வரபியோவ் குன்றுகள், அர்பாத் பக்கத் தெருக்கள்... அவை அத்தகைய வேடிக்கையான பெயர்களைக் கொண்டவையுங்

கூட. (சிரிக்கிறான்.)

தான்யா: நான் அர்பாத்தை விரும்பவில்லை.

இக்னாதவ் (குழம்பியபடி): அப்படியா?.. ஆனா நீங்களோ எப்படி இந்தப் பகுதிக்கு வந்தீங்க? தொலை தூர வடக்கு, தங்க வேட்டைக்காரங்க, தைகா — இது ரோமான்ஸ் தான் உங்களை அழைத்து வந்திருக்கணும் என எண்ணுறேன் — அது போல்தான் இல்லையா?

தான்யா: ரோமான்ஸா? எனக்குத் தெரியாது. வெறுமனே பல்வேறு சாலைகளில் பயணம் செய்கிறேன், பல்வேறு பருவநிலைகளில், பல்வேறு மக்களைப் பாக்கிறதுக்காக. அப்படித்தான்.

இக்னாதவ்: விஷயங்களை மிகப் பெருமளவுக்கு எளிமையாக்குறீங்க, தோழர் டாக்டர்.

தான்யா: ஆமா! இப்பக் கொஞ்சக் காலமா சிக்கலாக்குதலைக் கண்டு நான் அஞ்சுறேன். (இடைவெளி.) சந்தேகமின்றி, வேலை நிலைமைகள் இங்கே... தனிப்பட்டவை... மக்களில்லை, சாலைகள் இல்லை, மழை, பனி, பனிப்புயல்கள், இதற்கு மேலாக எல்லா நேரமும் பயணங்கள்! ஆரம்ப மாதங்களின் போது என்னாலே நிலைச்சு நிற்க முடியாதுன்னு எண்ணினேன் — தைகாவுக்கு ரொம்ப அஞ்சினேன், என்னோட பாதையைத் தவறவிட்டுவிட்டு பனிப்புயலில் சிக்கிக்கிறுவேன்னு தொடர்ச்சியா கற்பனை செய்துக்கிட்டு இருந்தேன்... ஆனா காலம் கடந்து போச்சு, நானும் பழகிப்போயிட்டேன்.

இக்னாதவ்: ஆனா எதுக்காக இங்கே, சைபீரியாவுக்கு வந்தீங்க?

தான்யா: அது எனக்குத் தோன்றியது... நான்...

இந்த மாவட்டத்திற்குப் போகின்ற வாய்ப்பை எனக்குத் தந்தாங்க, நான் ஏற்றுக்கொண்டேன்.

இக்னாதவ்: அதுக்காக வருந்துறீங்களா?

தான்யா: துளி கூட இல்லை... ஆனா இது முக்கியமான விஷயமல்ல.

இக்னாதவ்: பிறகு உங்க கருத்துப்படி முக்கியமான விஷயம் என்ன?

தான்யா: இங்கு பயனுள்ளதா இருக்கிறதா உணர்றேன். இதுதான் முக்கியமா இருக்கு. எஞ்சியவை அவ்வளவு முக்கியமில்லே. வேலை மட்டுமே உண்மையான மகிழ்ச்சியைக் கொண்டுவர முடியும். மற்ற எல்லாமே கற்பனை, பொய்!

இக்னாதவ்: எல்லாமா?

தான்யா (சுருக்கமாக): ஆமா.

இக்னாதவ்: நட்புக் கூடவா?..

தான்யா: மெய்யான நட்புக்கு நிறைய நேரம் வேண்டும், ஆனா நேரம் இங்கே எனக்குக் கிடைக்காத ஒன்னு.

இக்னாதவ் (சிந்தனைப் பாங்கோடு): தனிமை தான் ஒரு மனிதனை வலிமையுடையவனாக் கும்னு பெரும்பாலும் நீங்க நம்புறீங்க. அந்த எண்ணங் குறித்து எச்சரிக்கையா இருங்க, அது உங்களைச் சுயநலத்துக்கு அழைத்துச்செல்லும்.

இடைவெளி.

தான்யா (இக்னாதவைக் குறிப்பாகப் பார்த்துக் கொண்டு): நீங்க யார்?

இக்னாதவ்: நானா? உங்களைப் போலத்தான், பல்வேறு சாலைகளின் வழியாகப் பயணம் செய்கிறேன், பல்வேறு பருவநிலைகளில், பல்வேறு

மக்களைப் பார்ப்பதற்காக. (இடைவெளி.) இங்கு தனிமையிலா இருக்கீங்க? உங்க குடும்பம் எங்கே இருக்கு?

தான்யா: என் பெற்றோர்கள் கிரஸ்னதார் நகரத்தில் வசிக்கிறாங்க.

இக்னாதவ்: மாஸ்கோவிலோ... யாரையாவது விட்டு வந்திருக்கீங்களா?

தான்யா: யாருமில்லே.

இக்னாதவ்: நீங்க திருமணம் செய்து கொண்டீங்களா?

தான்யா: கடவுளுக்கு நன்றி, அது இல்லாமலே நான் சமாளிச்சுட்டேன்.

இக்னாதவ்: ஏன் இப்படிச் சொல்றீங்க?

தான்யா: காதல் ஒருத்தரை ஆரம்பத்தில் குருடாக்குகிறது, அப்புறம் இரப்பாளி ஆக்குது.

இக்னாதவ்: கேக்கிறதுக்காக என்னை மன்னிக்கணும், ஆனா எங்கிருந்து இந்த எண்ணத்தைப் பெற்றீர்கள்? இப்படிக் கூறுவதற்கு யாரோட அநுபவம் உங்களுக்குக் களமாக இருந்துச்சு?

தான்யா: அது அப்படித்தான் என்று எனக்குத் தெரியும். எனக்கு மிக நெருக்கமான ஒருத்தி இருந்தாள், சிநேகிதி, அவள் வாழ்க்கையிலே ஒரு நிகழ்ச்சி...

இக்னாதவ்: உங்களோட சிநேகிதி ஓர் அயோக்கினைச் சந்தித்தாள் என்றால், பூமியில் காதலோ, நட்போ இல்லை என்பதாக நான் உண்மையாவே நம்பத்தான் வேணுமா?..

தான்யா: நிறுத்துங்க! (இக்னாதவுக்கு முன்பாக அவள் நிற்கிறாள், அவனை அடிப்பது போல தனது முட்டிகளை மடக்கிக் கொண்டிருக்

கிறாள்.) இந்த நிமிடமே நிறுத்துங்க! (இடைவெளி.) எந்த வகையிலும் அது அவரோட குற்றமில்லே... எந்த வகையிலும், நீங்க புரிஞ்சுக்கிட்டீங்களா?

வீட்டுக்காரி (திரைக்குப் பின்னாலிருந்து வந்துகொண்டு): பாருங்க, வெளிச்சம் வந்துக்கிட்டிருக்கு. (வாசினிடம் செல்கிறாள்.) படபடப்புக்காரன் என்ன? தூங்கத்தான் போயிருக்கானா? காலை வரை அவன் எவ்வளவு களைப்பாக இருக்கான்னு பாருங்க. (திரும்பவும் திரைக்குப் பின்புறம் செல்கிறாள்.)

இக்னாதவ்: என்னை மன்னிச்சுருங்க.

தான்யா (தனது தலையை அசைத்துக்கொண்டு): பரவாயில்லே.

இக்னாதவ்: நான் யாரையும் குற்றம் சாட்ட விரும்பலே.

தான்யா: நான் புரிஞ்சுக்கிட்டேன்.

இடைவெளி.

இக்னாதவ் (சன்னலுக்கு வெளியே பார்த்துக்கொண்டு): காலை நேரம்...

தான்யா: ஆமா... இதோ, இரவு போய் விட்டது.

இக்னாதவ்: நம்மோட உரையாடல் ஒருவகையில் தெளிவற்ற ஒன்னாப் போச்சு.

தான்யா: நீங்களோ... நீங்க ஓர் அதிசய மனிதர். நான் மகிழ்ச்சியா இருக்கேன்னு உங்களுக்குச் சொல்றேன், நீங்களோ ஏதோ காரணத்திற்கு என் மனத்தை மாற்ற விரும்புகிறீங்க.

இக்னாதவ்: ஆனா நீங்க மற்றொரு தவறு செய்

தால் எந்த வகையிலும் சிறப்பா இருக்குமா?

தான்யா: மற்றொன்றா? ஏன் மற்றொன்று?

இக்னாதவ் விடை அளிக்கவில்லை.

வெளிப்பார்வைக்கு மழை நின்னு போச்சு. (சன்னலுக்கு வெளியே பார்க்கிறாள்.) தைகாவுக்கு மேலாக உள்ள பனிமூட்டத்தைப் பாருங்க. (பலமாக மூச்சு விட்டுக்கொள்கிறாள்.) இங்கே புழுக்கமா இருக்கு. ஆனா அங்கே, ஃபிர் மரங்களுக்கு அப்பால், காத்து நிச்சயமா சுத்தமாவும் புத்தம் புதுசாவும் இருக்கும்... இது போன்ற பருவ நிலையில் வீட்டிற்குச் சவாரி செய்யுறது அருமையா இருக்கும்... ஆமாம், வீட்டிற்கு... (கேலியாக.) அந்தச் சொல்லை நான் இங்கே இன்னமும் பழகிக்கொள்ள முடியலே. வீடு... அது பற்றி நான் நினைச்சுப் பார்க்கிறேன், அது எங்கோ தொலை தூரத்தில் இருப்பது போல எனக்குத் தோனுது, மிகத் தொலைவில், குதிரையிலேறிப் பறந்தாலும் ஒரு நாள் முழுக்க, அல்லது இரண்டு நாள் அல்லது ஒரு வாரம் என்றாலும் அங்கே ஒரு தரால் இன்னமும் போய்ச் சேர முடியலே.

வீட்டுக்காரி (திரையை இலேசாகத் தூக்கிக் கொண்டு): ஓல்யா எழுந்துட்டா.

தான்யா: வாறேன். (திரைக்குப் பின்னால் செல்கிறாள்.)

அவள் செல்லும் போது சிந்தனை வயப்பட்டபடி இக்னாதவ் உற்றுக் கவனிக்கிறான். வெளியே ஒரு கார் வந்துகொண்டிருப்பது கேட்கிறது. சற்று நேரங் கழித்து,

விறுமிக்க, வெயிலினாற் கன்றிச் சிவந்த ஹேர்மன் நுழைகிறான்.

இக்னாதவ்: ஆ, வந்துட்டியா! எத்தனையோ காலமா உன்னைக் காணலிலே!

ஹேர்மன் (வணக்கம் தெரிவித்த படி): ஆமாம், சுமார் ஒன்னரை மாதங்களா. நீ எங்களை மறந்துட்டாயே, அலெக்சேய் இவானவிச்.

இக்னாதவ்: உங்களைப் பத்தி நான் ஏன் கவலைப் படணும்? நீங்க படிச்ச ஆட்கள், திட்டத்தை நிறைவேத்துவீங்க.

ஹேர்மன்: நீ வீட்டிற்குப் போகிறாயா அல்லது வீட்டிலிருந்து வந்தாயா?

இக்னாதவ்: ஒரு சக்கரத்தைக் கட்டிவச்சிருக்கு. இவ்விடுதிக்கு மட்டுமே வர முடிந்தது, அதுவுங்கூட நல்லது. ஆனா நீ இந்நேரத்திலே எங்கே போகப் போகிறாய்?

ஹேர்மன்: உன் பெர்ஃபீல்யெவ் என்னை அழைச்சார். இங்கிருக்கிற வயசான ஆளிடமிருந்து நான் கொஞ்சம் பெட்ரோலை நிரப்பிக்கிற விரும்புறேன். இல்லேன்னா நான் நகரம் வரை செல்ல இயலாது.

இக்னாதவ் (ஹேர்மனுடைய கட்டுப் போடப்பட்ட கையைப் பார்த்துக்கொண்டு): உன் கைக்கு என்ன ஆச்சு?

ஹேர்மன்: என் விரலிலே ஒரு காயம் பட்டுறுச்சு. சுமார் இரண்டு வாரமா இது எனக்கு வேதனையைத் தருது. நகரத்திலுள்ள ஒரு டாக்டரைப் பார்க்கச் செல்ல விரும்புறேன்.

இக்னாதவ்: நகரத்தில் எதுக்காக? நான் இந்த

நிமிடத்திலேயே உனக்கு ஒரு டாக்டரை அறி முகம் செய்து வைக்க முடியும்.

தான்யா (திரைக்குப் பின்னாலிருந்து கத்துகிறாள்): கொஞ்சம் அமைதி, தயவு செய்து! நீங்க உண் மையிலேயே தொல்லையாகிக் கொண்டு வா றீங்க!

ஹேர்மன்: இது... யாரோட குரல்? யாரது?

இக்னாதவ்: டாக்டர். ஏன்?

ஹேர்மன்: டாக்டரா? எனக்குத் தோனுது... வேடிக்கையானது.

இக்னாதவ்: நாம் போய்க் கிழவனை உசுப்பு வோம். நாம் அங்கிருக்கும் போது, தான் செய் றதை டாக்டர் முடிச்சுடுவாள். பிறகு உனக்கு அறிமுகம் செய்துவைக்கிறேன்.

*பலகைப் படுக்கையின் அருகிலுள்ள சிறு கதவின் வழியாக அவர்கள் செல்கிறார்கள். திரைக்குப் பின் புறமிருந்து தான்யா வீட்டுக்காரி பின் தொடர வருகிறாள்.*

தான்யா: எல்லாமே நல்லா இருக்கு, மூனு நாளில் அவள் எழுந்துருவா. தொண்டை கழுவு நீர்மத் தை அவள் பயன்படுத்த வேண்டியதில்லே. தூள் மருந்தைப் பொருத்த வரை — இதோ அவற் றை — இரண்டு நாளைக்கு அவள் சாப்பிட்டு வரலாம். எந்தச் சிக்கலும் ஏற்படாதுன்னு நினைக்கிறேன். அவள் ஒரு வலுவான சிறுமி.

வீட்டுக்காரி: நன்றி, தான்யா, அன்பே...

தான்யா (சன்னலுக்கு வெளியே பார்த்துக் கொண்டு): மேகங்கள் கலைஞ்சு போய்க்கிட்

டிருக்கு, சூரியன் வெளித்தெரியலாம்... நான் போகிறேன்...

மூட்டுக்காரி: ஒருவேளை உனக்கு ஓய்வு வேணாமா?

தான்யா: இல்லை, 'கோல்டன் ரே'யை நான் இன்னமும் போய்ப் பார்க்க வேண்டி இருக்கு.

மூட்டுக்காரி: அப்புறம், போய் வரலாம் என்று நினைக்கிறேன், என் அன்பே. (தான்யாவை முத்த மிடுகிறாள்.) ஓல்யாவுக்குப் பால் கொடுக்கிறேன். (திரைக்குப் பின்னால் போகிறாள்.)

தான்யா தனது மேற்சட்டையை அணிகிறாள், பையை எடுத்துக்கொண்டு, கதவுக்குச் செல்கிறாள். சிறிய அறை யிலிருந்து இக்னாதவ் வெளிவருகிறான்.

இக்னாதவ்: அப்ப, நீங்க புறப்பட்டாச்சா?

தான்யா: ஆமா.

இக்னாதவ்: பாருங்க, சூரியன்! உங்களோட பய ணத்திற்காகத்தான், ஏன்னா சவாரி செய் வது உங்களுக்கு மகிழ்ச்சியா இருக்கும்.

தான்யா: நன்றி.

இடைவெளி.

இக்னாதவ்: ஆக, என் மீது குறை பாராட்ட வில்லையா?

தான்யா: இல்லை. எதுக்காக?..

இக்னாதவ்: உங்களுக்கு ஏதாவது உதவி தேவைப் பட்டா வந்து என்னைப் பாருங்க.

தான்யா (முறுவலித்தபடி): அந்தோ, பாருங்க, நீங்க யார் என்று கூட எனக்குத் தெரியாது.

இக்னாதவ்: மன்னிக்கணும், நான் புரிஞ்சுக்கலே. நான் இக்னாதவ், அலெக்சேய் இவானவிச்.

தான்யா: இக்னாதவ்? தங்கச் சுரங்க மாவட்டத்தினுடைய மேலாளரா?

இக்னாதவ்: அதே.

தான்யா (முறுவலித்தபடி): ஆனா உங்களைப் பார்க்கப் போனேன். குளிர் காலத்தில் கடுமையான மருந்துத் தட்டுப்பாடு இருந்தது, போக்குவரத்தோ திகைக்க வைக்கிறதா இருந்துச்சு, ஆகவே முடிவு செய்தேன்... பொதுவா, அந்நேரத்திலே நான் உங்களுக்கு நிறைய கவலைகளைக் கொண்டுவர முடியும்.

இக்னாதவ்: அப்படியா?

தான்யா: ஆமா. உங்களைக் காப்பாத்திய ஒரே விஷயம்: உங்க முன்னால் நான் அநுமதிக்கப் படலே என்பதுதான். (கேலியாக.) தோழர் இக்னாதவ் மிகவும் மும்முரமாக இருக்கிறார்ன்னு சொன்னாங்க.

இக்னாதவ்: அப்படி நடக்கும். பெல்ஜியமும், ஹாலந்தும் சேர்ந்ததைவிட கொஞ்சம் பெரியது என்னோட மாவட்டம். ஆகவே எம்மேலே அதிகமாகக் கோபப்பட்டுறாதீங்க. சில வேளைகளில் மும்முரமாக இருக்கேன். அடிக்கடி என்பதும் உண்மைதான்.

தான்யா: பிறகு எதுக்காக என்னை அங்கே அழைக்கிறீங்க? மறுபடியுமா உங்களுக்கு நேரம் கிடையாது.

இக்னாதவ்: அது சாத்தியந்தான். அம்மாதிரியான சமயத்திற்காக இப்பவே உங்ககிட்டே முன் கூட்டியே மன்னிப்பைக் கேட்டுக்கிறேன்.

தான்யா: நீங்க ரொம்ப அன்பானவர்.

இக்னாதவ்: ஆனாலுங் கூட, நாம் ஒருத்தரை ஒருத்தர் மீண்டும் பார்த்துக்கிட்டா, நான் ரொம்ப மகிழ்ச்சி அடைவேன். என்னோட கருத்துப்படி, எந்த வகையிலோ நாம் இன்னமும் நம்ம உரையாடலை முடிச்சுக்கிறலே. (இடைவெளி.) வாழ்த்துக்கள்.

தான்யா: வணக்கம்.

*அறையை விட்டு தான்யா விரைந்து ஓடுகிறாள். கதவு ஓசையிடுகிறது.*

வாசின் (கண் விழித்தபடி): ஆ? என்ன? ஏற்கெனவே விடிஞ்சு போச்சா? அப்படித்தான், ரொம்ப முக்கியமான நேரத்திலே நான் தூங்கிப் போயிட்டேன்! எல்லாமே அந்த இசை காரணமாகத்தான்!

ஹேர்மன் (சிறிய கதவு வழியாக நுழைந்து கொண்டு): நல்லது, அலெக்சேய் இவானவிச், உன்னோட டாக்டர் எங்கே?

இக்னாதவ்: நாசமாய்ப் போக, உன்னைப் பத்தியே மறந்துட்டேன்!.. என் மூளையிலிருந்து சுத்தமா அது நழுவிப்போச்சு!

ஹேர்மன்: என்ன? அவள் போயிட்டாளா?

வாசின்: எப்படி போயிட்டாள்? கத்தமாவா? நீங்க விழிச்சுக்கிட்டு இருந்தீங்களா? நீண்ட நேரமாவா? ஓ, நான் தூங்கிப்போயிருக்கக் கூடாது!

இக்னாதவ் (ஹேர்மனை சன்னலுக்கு அழைத்துச் சென்று): பாரு, அதோ அவள்தான், சாலையில் குதிரையில் போகிறவ... இப்ப அவளை உன்

*னால் பிடிக்க முடியாது!..*

*வாசின் (கலக்கத்துடன்): நான் அதிகந் தூங்கிட் டேன்! ஐயோ, அதிர்ஷ்டக் கட்டை, அதிர்ஷ்டக் கட்டை... பார், இந்த மனுசன் கண் விழிக்கி றான், மற்றொருத்தன் வாரான், இதுக்கு மேலே யும் அவள் இங்கிருக்கவில்லே... இங்கே என்ன நடந்துக்கிட்டிக்கு என்பதும் தெரியலே! அடா! ரொம்பச் சுவையான பகுதியிலே நான் தூங்கிப் போயிட்டேன், அதை எனது நெஞ்சார உணர் றேன்!*

## காட்சி ஆறு

*நவம்பர் ஏழு, 1938*

*இக்னாதவுடைய இடம். மரத்தாலான வீட்டில் அகன்ற வெளிச்சமுள்ள ஓர் அறை. அது மிகுந்த வெதுவெதுப் பாகவும் சுகமானதாகவும் இருக்கிறது. மதியச் சாப் பாட்டுக்காக மேசை போடப்பட்டுள்ளது. அடுப்பு எரி கிறது. வானொலிக்கு அருகே இக்னாதவ் கை வைத்த நாற்காலியில் உட்கார்ந்து கொண்டிருக் கிறான். செஞ்சதுக்கத்தில் நடைபெறும் ராணுவ அணி வகுப்பை மாஸ்கோ வானொலி ஒலிபரப்பிக் கொண் டிருக்கிறது. வானொலியைக் கேட்டபடி, அவன் தனது கண்களை மூடிக்கொண்டு நாற்காலியின் பின்புறத்தில் தலையைச் சாய்த்திருக்கிறான். கதவு தட்டும் ஓசை கேட்கிறது. வேண்டா விருப்போடு இக்னாதவ் போய் கதவைத் திறக்கிறான். தான்யா நுழைகிறாள். அவள் கைகளில் வெண்பனிச் சறுக்குக்கட்டைகளை வைத்துக்கொண்டிருக்கிறாள். முகம் வெளிறிப்போய் இருக்கிறது. அவளுடைய அசைவுகள் தயக்கங்கொண்ட தாக இருக்கின்றன.*

இக்னாதவ் (பெரு மகிழ்ச்சியோடு): தத்யானா அலெக்சேயெவ்னா, என்ன ஆச்சரியம்! வாங்க உள்ளே, வாங்க உள்ளே... இப்படி, அடுப்புக்கு.

தான்யா: உங்க தரையை நான் குழப்பிவிடுவேன்... மேலும் வெண்பனிச் சறுக்குக்கட்டைகள்...

இக்னாதவ்: வெண்பனிச் சறுக்குக் கட்டைகளை நாம் மூலையில் வைக்கலாம். இப்ப, உங்களோட மேலங்கியை எடுத்துவச்சுட்டு, இங்கே உக்காருங்க, உங்களுக்கு விருப்பமான இடம். விடுமுறை ஊர்வலத்தில் இருக்கீங்களா? அதையொட்டி தைகா முழுதுமே நகரத்தில் இருக்கு. நவம்பர் புரட்சி தினத்தில் இங்கு எப்பவுமே அப்படித்தான் இருக்கு... நீங்க வந்தது ஒரு நல்ல காரியம் — நாம் மதியச் சாப்பாட்டைச் சேர்ந்தே சாப்பிடலாம், பிறகு கழகமனைக்குச் சென்று இசை கேட்கலாம்! இன்னைக்கு நீங்க ஓய்வாக இருக்கீங்க, இல்லையா?

தான்யா: ஆமா... நேத்து நான் செரெம்ஷான்ஸ்கி தங்கச் சுரங்கத்துக்கு அழைக்கப்பட்டேன். ராத்திரிப்பொழுதை அங்கேயே கழிக்க வேண்டியிருந்துச்சு, காலையில் மீண்டும் ஓய்வா இருந்தேன். ஆனா இன்னைக்கு எந்த அதிர்ஷ்டமும் இல்லாமப் போச்சு. ஒரு வண்டியில் கிளம்பினோம், வண்டியோ ஓடாது நின்னு போச்சு.

இக்னாதவ்: ஆமா, ராத்திரி முழுக்க அதிகமாகப் பனி பெய்துக்கிட்டிருந்தது, மாவட்டம் பூராவே போக்குவரத்து சீர்குலைந்து போச்சு. எல்லாச் சாலைகளையும் மூடிட்டதாச் சொல்றாங்க. (இடைவெளி.) சரி, இங்கு எப்படி வந்து சேர்ந்தீங்க? வெண்பனிச் சறுக்குக்கட்டைகளிலா?

தான்யா (தலையசைத்துக் கொண்டு): ஆனா நான் இங்கே அதிக காலத்திற்கு இருந்ததில்லே... பத்து நாள்கள் அல்லது அப்படி... நீங்க எங்கேயோ போயிருந்ததாக் கேள்விப்பட்டேன்?

இக்னாதவ்: மாவட்டத்தில் சுற்றுப் பயணம் போயிருந்தேன் — உங்கள் பகுதியில்தான். இப்ப நீங்க புகழ்பெற்றவளா இருக்கீங்க; உங்களைப் பத்தி அநேக வியக்கத்தக்க விஷயங்களைக் கேள்விப்பட்டேன்!..

தான்யா எதுவும் கூறாது விநோதமான முறையிலே இக்னாதவைப் பார்க்கிறாள்.

இக்னாதவ்: உண்மையைச் சொல்லப் போனா, நீங்க இல்லாக் குறையை உணரத் தொடங்கினேன். உண்மையாவே நோய்வாய்ப்பட்டா நல்ல திட்டமாக இருக்கும்னு நேத்து சிந்திச்சுப் பார்த்தேன்... தத்யானா அலெக்சேயெவ்னா எனக்குச் சிகிச்சை செய்யத் தொடங்கிருவாள்! என்னுடைய பகற் கனவாலே எங்காவது தூக்கிச் செல்லப்படுவேன், உண்மையாவே என் உடல் வெப்பநிலை கூடிப்போச்சு. அது முப்பத்தெட்டு புள்ளி ஐந்தா இருந்துச்சு. அப்புறந்தான் குவிந்து கிடக்கிற எல்லா வேலைகளையும் நினைத்துப் பார்த்தேன், என்னோட மனசை மாத்திக்கிட்டேன். படுக்கைக்குப் போறதுக்கு முன்னே திரும்பவும் வெப்ப அளவைப் பார்த்தேன், அது சாதாரணமாகவே இருந்துச்சு. (சிரிக்கிறான்.)

தான்யா தனது கைகளால் முகத்தை மூடிக்கொண்டு அழுகிறாள்.

என்ன... என்ன விஷயம்?

தான்யா: என்னைப் போக விடுங்க...

இக்னாதவ்: என்ன சொல்றீங்க, உங்களைப் போக விடுறதுக்கு?

தான்யா: சைபீரியாவிலிருந்து... சீனியர் மருத்துவ அதிகாரியோடு சற்று முன்னே பேசிக்கிட்டிருந்தேன், அவர் மறுத்துட்டார்... ஆனா நீங்க அவரோட அதிகாரி, ஆகவே அவரிடம் சொல்லுங்க, அவர் உங்கள் கட்டளைகளுக்குக் கீழ்ப்படிவார்.

நீண்ட நேர அமைதி.

இக்னாதவ்: என்ன நடந்துச்சு?

தான்யா: செரெம்ஷான்ஸ்கி தங்கச் சுரங்கத்தில் என்ஜினியரான ஃபிரா மார்கினாவை உங்களுக்கு நினைவிருக்கா? அவள் நேத்து ராத்திரி இறந்து போனாள்.

இக்னாதவ்: என்ன? ஃபிராவா?..

தான்யா: அவள் இறந்து விட்டாள் என்பதை நினைச்சுப் பாக்கவே கஷ்டமா இருக்கு, இல்லையா? ஆனா நான் தான் அதைச் செய்தவள்...

இக்னாதவ்: நீங்களா?

தான்யா: அவளுக்கு மோசமான வயிற்று சீழ்ப்புண் இருந்துச்சு... நல்லது, நேத்து அதன் விளைவா துளையேற்பட்டும், அழற்சியும் கண்டிருந்துச்சு. நான் அவளிடம் நேரடியாகப் போனேன்... கதையைச் சுருக்கமாகச் சொல்றேன், அவளுக்கு அங்கேயே அப்படியே ஆப்பரேஷன் செய்திருக்

கணும். ஆனா எந்தக் காரணத்தாலே நான் பயந்துட்டேன். அவளை இங்கே மருத்துவம னைக்கு எடுத்து வர முடிவு செய்தேன். (அமைதி யாக.) காலை விடியிறபோது, வரும் வழியி லேயே அவள் இறந்துட்டா. நான் துணிவுகொள் ளாததாலும், தட்டிக் கழித்தன் காரணமாவும் அவள் இறந்துட்டா...

அமைதி.

நான் அவளிடம் வருகிறபோது, அவள் சொன் னாள்: ''இப்ப நான் இதிலேயிருந்து பற்றிப் பிடித்து முன்னேறிக்கிட்டிருக்கேன்.'' முடிவு ஏற் படுறதுக்குச் சற்று முன்னதாகத்தான் வியப் புக்குரிய முறையிலே என்னைப் பார்த்தாள்... (கடுந்துயருடன் அழுகிறாள், தேற்ற முடியவில் லை.)

இக்னாதவ்: வேண்டாம். நிறுத்துங்க. நீங்க அழக் கூடாது.

தான்யா: தள்ளிப் போய்விட விரும்புறேன். முற் றிலும். என் மீதே இனிமேலும் எனக்கு நம்பிக் கை இல்லே... நான் ஓர் இரங்கத்தக்க, பலமற்ற பெண்... முட்டாள், தகுதியற்றவள்...

இக்னாதவ்: எங்கு போக விரும்புறீங்க?

தான்யா: கிரஸ்னதாருக்கு. என் பெற்றோர் களிடம்.

இக்னாதவ்: ஏன்?

தான்யா: எனக்குத் தெரியாது. நான் இசை பயில்வேன்... அல்லது கற்றுக் கொடுப்பேன். எனக்குத் தெரியாது. நான் வீட்டிற்குப் போக

விரும்புறேன். வீட்டிற்கு, நீங்க புரிஞ்சுக்கிட்டுங்களா?

இக்னாதவ் (தான்யாவையே நீண்ட நேரமாகப் பார்க்கிறான், பிறகு மென்மையாக அவளது தலை மீது தனது கையை வைக்கிறான்): போதும். கதற வேணாம். நீங்க எங்குமே போக வேண்டியதில்லை. (அவனது குரல் பாசமிக்கதாக மாறியிருந்தது.) பாருங்க, நீங்க வீட்டிற்குத் திரும்பப் போக வேண்டியதில்லே. இப்படிப்பட்டவளாக உங்களைப் பார்க்கிறதுக்கு உங்க பெற்றோர் எதிர்பார்த்துக் கொண்டிருக்காங்கன்னு நீங்க உண்மையாகவே நினைக்கிறீங்களா?.. இந்த மனநிலையில்? நம்பிக்கையற்ற, விருப்பங்களற்ற, காலியான இதயத்தோடு தங்களது மகளைக் காண்பதற்கு. இத்தனை ஆண்டுகளா இதுக்குத்தான் அவர்கள் காத்துக் கொண்டிருந்தாங்கன்னு நீங்க நினைக்கிறீங்களா? இல்லை, நீங்க இங்குதான் தங்குகிறீங்க. (சற்று கண்டிப்போடு.) நான் உங்களை விடுவிக்கவில்லை.

தான்யா: இங்கு என்னை யார் விரும்புறாங்க? (மெதுவாக.) நான் தோற்றுப்போனேன். (இடைவெளி.) இதோ, நான் இந்த வார்த்தைச் சொன்னேன்.

இக்னாதவ்: இது உண்மை அல்ல. இந்த மாவட்டம் பூராவும் உங்களை விரும்புறாங்க, மரியாதை செய்றாங்க... நான்... நான்... இப்ப எவ்வளவு சங்கடமாக இருக்கும் என்பதை பெரும்பாலும் புரிஞ்சுக்கிட்டேன்... ஆனா... நீங்க கொஞ்சம் இரக்கமற்றவளாகக் கத்துக்கணும். ஒரு டாக்டருடைய பணியில் இது ஒரு பகுதி.

அமைதியா இரக்கப்படுங்கள், உங்க இதயத்தின் ஒரு சிறு பகுதியால், ஆகவேதான் யாரும் அறிந்து கொள்ள மாட்டார்கள். ஆனா ஒவ்வொருத் தரையும் குணப்படுத்த முடியாது என்ற காரணத் தால் நம்பிக்கை இழக்க முடியுமா? அடுத்த சுற்று பார்வையிடும் போது, நாளை அது உங் களுக்கு உதவி செய்யாது.

*தொலைபேசி மணி ஒலிக்கிறது. இக்னாதவ் ரிசீவரை எடுக்கிறான்.*

ஆமாம், நான்தான். வணக்கம். ஆமாம், அவள் இங்குதான் இருக்கிறாள்... இல்லை, எந்தக் காரணத்தாலும் வேண்டாம்... ஒரு நொடி. *(ரிசீவரைத் தான்யாவிடம் கொடுக்கிறான்.)* இது சீனியர் மருத்துவ அதிகாரி.

தான்யா *(தொலைபேசியில்)*: ஆமாம்... இல்லை, சொல்லுங்க... *(நீண்ட நேரம் கேட்கிறாள்.)* நிக்கலாய் ஃபதேயெவிச், விழா விஷயத்தின் காரணம் இல்லை, என் தோழர்களுக்குப் பதிலா வேலை செய்ய ஒருபோதும் நான் மறுக்கலே. ஆனா இன்னைக்கு... இன்னைக்கு என்ன நடந் ததுன்னு உங்களுக்குத் தெரியும். நான் ரொம்ப மோசமான மனநிலையிலே இருக்கேன். மேலும் அது வெறுமையான தகுதி விஷயந்தான். *(மீண் டும் நீண்ட நேரம் கேட்கிறாள்.)* என்ன? ஒரு குழந்தையா? ஆம்... உண்மையாகவே, அது வித்தியாசமானது. சரி. நேரடியாவே நான் அங்கு போகிறேன். *(ரிசீவரை வைக்கிறாள்.)*

இக்னாதவ்: என்ன நடந்துச்சு?

தான்யா: 'ரோஜா' என்ற தங்கச் சுரங்கத்திற்கு நான் உடனடியாகப் புறப்பட்டாகணும். ஒரு குழந்தைக்கு முடியாமப் போச்சு, எல்லாக் குழந்தைகளுடைய பிரச்சினைகளையும் நான்தான் பார்த்தாகணும். உண்மை, இது என்னோட எல்லைக்குட்பட்டது அல்ல, இதற்கு முன்னாலே நான் ஒருபோதும் அங்கே போனதில்லே; ஆனா டாக்டர் ஸ்தாசிக் நல்லா இல்லை, இன்னொரு டாக்டர் கெனரேவிச் கிரஸ்னயார்ஸ்கில் இருக்கார். வந்து, ஒரு வார்த்தையில் நான் போயாகணும்.

இக்னாதவ்: 'ரோஜா' முப்பது கிலோமீட்டர் தொலைவில் இருக்கு, அத்துடன் சாலைகள் முழுக்க அடைபட்டிருக்கு. நீங்க எப்படி அங்கே போய்ச் சேரப் போறீங்க?

தான்யா: நிக்கலாய் ஃபதேயெவிச்சுக்கு ஓர் ஏரோஸ்லெட்ஜ் தருவதாக அவர்கள் உறுதி சொல்லியிருக்காங்க.

இக்னாதவ்: பிறகு, நீங்க போகலாம்... ஆனா, மொத்தத்தில் நீங்க களைப்பா இல்லையா?

தான்யா: ஓரளவுக்கு... எனது கைகள் நடுங்கிக்கிட்டிருக்கு, தூங்கணும்னு ரொம்ப விரும்புறேன், எல்லா நேரமும் குழம்பிப் போய்விடுறேன்: இப்பக் காலையா, பிற்பகலா, மாலையா?

இக்னாதவ்: இருந்தாலும் போங்க. இன்னும் இரண்டு நாள் பொழுதிலோ, நாம் மீண்டும் சந்திக்கும்போது, எல்லாவகையான கொடூரமான எண்ணங்களும், அவை ஒருபோதும் இல்லாதிருந்தது போல மறைந்து போகும். எல்லாமே

மறந்துபோகும், என் அருமை தத்யானா அலெக்சேயெவ்னா, என் வார்த்தையை நம்புங்க.

தான்யா: இல்லே. எதுவுமே மறந்துபோகாது. எதுவுமே. என் அருமை அலெக்சேய் இவானவிச், உங்களை அப்படியே இறுகக் கட்டித் தழுவ விரும்புறேன், என் தலையை உங்கள் தோள் மீது வச்சு... நீங்க ஓர் அபூர்வ மனிதர், அலெக்சேய் இவானவிச், ஆனா என்னைப் பத்தி உங்களுக்கு என்ன தெரியும்? ஏதுமில்லே. (இடைவெளி.) நான் உங்களிடம் உண்மையைச் சொல்லலே. எனக்குக் கணவர் இருந்தார். மூனு ஆண்டுகளுக்கு முன்னாலே அவரை விட்டுப் பிரிஞ்சுட்டேன். அவரை விட்டு நான் பிரிஞ்சதுக்குக் காரணம் அவரை நான் அதிகம் நேசித்ததுதான். மிக அதிகமாக, அதனாலே துளி கூடத் தவறாக நடக்க அவரை நான் அனுமதிக்கலே. அது பத்திப் பேசுவதற்குக் கஷ்டமாக இருக்கிறது.

இக்னாதவ் (அமைதியாக): எனக்குத் தெரியும்.

தான்யா: உங்களுக்குத் தெரியுமா? எப்படி?

இக்னாதவ் (தன் தோள்களைக் குலுக்கிக்கொண்டு): நான் வெறுமனே புரிஞ்சுக்கிட்டேன்... அந்நேரத்திலே, அன்னைக்கு ராத்ரிரி, சாலையில்.

தான்யா: அவரைப் பிரிஞ்சுட்டேன். ஒரு பையனைப் பெற்றேன். பிறகு குழந்தை இறந்து போச்சு. தனிமையில் விடப்பட்டேன். முற்றிலும் தனிமையிலே. (இடைவெளி.) நான் உங்ககிட்டே ஒருபோதும் உண்மையைச் சொன்னதே இல்லை, எனது நினைவிலிருந்து கடந்த காலக் கறையை அகற்ற முடிவு செய்தேன்... அந்த வழியில் அது

சுலபமாக இருக்கும்னு நினைச்சேன்... ஆனா நான் தப்பாக நினைச்சேன். என்னால எதை யுமே மறக்க முடியலே.

**செனாதவ்:** அவர் யார்... உங்களோட கணவர்?

**தான்யா:** அவர் ஓர் என்ஜினியர். சைபீரியாவில் எங்கோ ஓரிடத்தில் வேலை செய்றார். (தளர்ச்சியுடன் முறுவலிக்கிறாள்.) அவர்கள் என்னை இங்கே அனுப்பிய போது, அவரைத் திடீரென்று நான் பார்க்க முடியும் என்று தான் உடனடியாக நினைச்சேன். அந்நேரத்தில், ஆனாலுங்கூட, எனக்கு நானே அதை ஏற்றுக்கொள்ளலே. ஆனா இப்ப அது எப்படி இருந்துச்சு என்பதை நான் அறிகிறேன்.

**செனாதவ்:** நீங்க இன்னமும் அவரைக் காதலிக் கிறீங்களா?

**தான்யா:** ஒருவேளை. ஆயினும்... காதலிக்கிறேன் — முற்றிலும் சரியான வார்த்தை இல்லே. இல்லே, நான் இன்னமும் அவருக்குச் சொந்தமாத் தான் இருக்கேன். (இடைவெளி.) சில வேளைகளில் அதுபத்தி நான் நினைக்கிறதுண்டு, இந்த நொடியே அவரைச் சந்திச்சா என்னையே கட்டுப்படுத்திக்கொள்ள முடியாதது போலவே எனக்குத் தோனுது. அவரோடு இருக்க நான் என்ன செய்வேன்னு கடவுளுக்குத்தான் தெரியும்... யாரையும் காப்பாத்த மாட்டேன்!

**செனாதவ்:** ஆக, நீங்க இம்மாதிரியான பெண்...

**தான்யா:** நான் அப்படிப்பட்டவள், நான் அன்புள்ளம் கொண்டவள் அல்ல.

தொலைபேசி மணி ஒலிக்கிறது.

ஒருவேளை இது நிக்கலாய் ஃபதேயெவிச். (ரிசீவரைக் கையிலெடுக்கிறாள்.) ஆமாம், இது நான் தான். (இடைவெளி.) நாம் என்ன செய்யணும்? நாளை வரை பொறுப்போம்? ஆனா குழந்தை ஆபத்தான நிலையில் நலமில்லாம இருக்கிறதுன்னு நீங்கதான் சொன்னீங்க... எனக்குத் தெரியாது... 'ரோஜா' வுக்கு வெண்பனிச் சறுக்குக்கட்டைகளில் நான் வருவதா, என்னமோ? இல்லை, நான் கொஞ்சம் களைப்பா இருக்கேன், ஆனா இது போன்ற சந்தர்ப்பத்தில் அது முக்கியமில்லே... ஆமாம், ஆமாம். நான் உடனடியாகப் புறப்படுறேன், மேலும் இருட்டுறதுக்கு முன்னமேயே அங்கிருப்பேன்... நல்லது... நன்றி. (ரிசீவரை வைக்கிறாள்.) நான் வெண்பனிச் சறுக்குக்கட்டைகளில் போக வேண்டி இருக்கு.

இக்னாதவ்: ஏரோஸ்லெட்ஜ் என்னாச்சு?

தான்யா: அது காலையிலேயே வேறு மாவட்டத்துக்குப் புறப்பட்டுப் போய்விட்டது.

இக்னாதவ் (சற்று அமைதிக்குப் பிறகு): உங்களுக்கு வழி தெரியுமா?

தான்யா: ஒருவேளை... உண்மையா, அது என்னோட வரம்புக்குட்பட்டது அல்ல. டாக்டர் ஸ்தாசிக் கீழ்ப்பகுதித் தங்கச் சுரங்கங்களில் வேலை செய்தான், ஆனா... என் பாதையை நான் தவற விட்டுருவேன்னு நினைக்கலே.

இக்னாதவ்: நீங்க 'கோல்டன் ரேய்க்கு' போய் இருந்தீங்களா? இவ்வாறு, அங்கிருந்து அது வடக்கே ஐந்து கிலோமீட்டர் தொலைவில் இருக்கு.

தான்யா: ஒரு பெரிய குன்றுக்குப் பின்னால் தானே இருக்கு? ஒருவேளை, நான் நினைக்கி

றேன், கோடைக் காலத்தில் அதைக் கடந்து சென்றேன்...

இக்னாதவ்: ஊம், அதாவது அது உங்களுக்குத் தெரியும். போய் வாங்க. (இடைவெளி.) இருப் பினும் முப்பது கிலோமீட்டர்கள் என்பது வெறும் விளையாட்டல்ல! (அமைதிக்குப் பிறகு.) ஒரு வழிகாட்டியைக் கூட்டிப் போகணும் என்று நீங்க நினைக்கலியா?

தான்யா: நீங்க என்ன, அலெக்சேய் இவானவிச், நான் சிறுமியில்லை. எனக்கு எல்லாச் சாலை களும் மிக நன்றாகத் தெரியும்!..

இக்னாதவ்: உங்க விருப்பம் போலச் செய்யுங்க. மொத்தத்தில் நமது மதியச் சாப்பாடு ஒன்னும் முடியாது போல இருக்கு. பாவம்!

இடைவெளி.

ஒருவேளை மதியச் சாப்பாட்டுக்கு உங்களுக்கு நேரமிருக்கா?

தான்யா: இல்லை, நான் அவசரமாப் போகணும்.

இக்னாதவ்: ஒருவேளை அப்படித்தான். உங் களிடத்திலே பிளாஸ்க் இருக்கா?

தான்யா: அதை நான் வீட்டிலே வச்சிட்டேன்.

இக்னாதவ்: கண நேரம் பொறுங்க. நான் என்னு டையதை உங்களுக்குக் கொண்டு வாறேன். (கதவுக்குச் செல்கிறான்.) நாம் சூடான காஃபி ஊற்றிநிரப்புவோம், வழியில் அது மிகவும் உதவி யா இருக்கும். (வெளியேறுகிறான்.)

தான்யா அறையைச் சுற்றிவருகிறாள், வானொலி அருகே நின்று, திருகுக் குமிழியைத் திருகிக்கொண்

டிருக்கிறாள். இசை கேட்கிறது, பிறகு திடீரென்று அமைதி, அதன் பிறகு அறிவிப்பாளரின் தெளிவான குரல்: ''இது மாவட்ட வானொலி நிலையம். அவசர வானிலை அறிக்கை. இன்று மாலை பனியும் காற்றும் எதிர்பார்க்கப்படுகின்றன. பனிப்புயல் கூட இருக்கலாம். மணி பதினெட்டிற்குப் பிறகு, அடுத்த பருவநிலை அறிவிப்பு வரை, எல்லாவிதப் போக்குவரத்தும் நிறுத் தப்படும்''. தான்யா திரும்பவும் திருப்புக் குமிழியைத் திருகுகிறாள், மறுபடியும் இசை கேட்கிறது. கைவைத்த நாற்காலியில் சிந்தனையோடு மெதுவாக அமர்கிறாள்.

(பிளாஸ்க் ஒன்றுடன் திரும்புகிறான்.) இதோ காஃபி. (அவளிடம் பிளாஸ்க்கைக் கொடுக் கிறான்.) தயவு செய்து வாங்கிக்கங்க.

தான்யா: வேண்டாம்.

இக்னாதவ்: இதெப்படி — வேண்டாம்?

தான்யா: விஷயம் என்னன்னா, நான்... ஒருவேளை நான் போகப் போறதில்லே.

இக்னாதவ் (சற்று நேர அமைதிக்குப் பிறகு): ஏன், நான் கேட்கலாமா?

தான்யா (அவனை உற்றுப்பார்க்கிறாள், முறுவலிக் கிறாள்): பாருங்க, நீங்க ஒரு வேடிக்கையான ஆள், அலெக்சேய் இவானவிச்... பிளாஸ்க்கை மேசை மேலே வையுங்கள். மொத்தத்திலே நான் என் மனசை மாத்திக்கிட்டேன்.

இடைவெளி.

இக்னாதவ்: உங்க மனசை மாத்திக்கிட்டீங்களா? நல்லது. இது உங்க உரிமை... கடைசியில், உண் மையிலேயே சாலை மிக மோசமா இருக்கு,

மேலும் நீங்க ரொம்பக் களைப்பா இருக்கீங்க... இருக்கட்டும். அப்ப, நாம் மதியச் சாப்பாட்டையாவது சேர்ந்து சாப்பிடலாம்.

தான்யா: சரிங்க.

மேசை முன்னர் அமர்கிறார்கள். இக்னாதவ் அவளுடைய தட்டிலே கொஞ்சம் சலாடைப் போடுகிறான்.

இக்னாதவ்: இருந்தாலும், ஏன் உங்க மனசை மாத்திக்கிட்டீங்க?

தான்யா: உங்களுக்குத் தெரியுமே, இதே விஷயத்தைப் பத்தி நானே நினைக்கிறேன். ஏன்? பெரும்பாலும், நான் கோழையா இருப்பது காரணமா இருக்கலாமே, உண்மையாவே.

இக்னாதவ்: சலாடைச் சாப்பிடுங்க.

தான்யா: ஓ, எவ்வளவு துயரத்தோடு அதைச் சொன்னீங்க! (சலாடைச் சுவைக்கிறாள்.) இந்தச் சலாட் சரிதான், ஆனா... அதை நாம் இன்னும் சரிசெய்ய முயலுவோம். உங்களிடம் காடி, சர்க்கரை, கடுகுகூட இருக்கு... (ஸாஸ் தயாரிக்கிறாள்.) இருந்தாலும் நீங்க என்னைக் கண்டிக்கிறீங்க என்பதை நான் பார்க்கிறேன், அலெக்சேய் இவானவிச். என்ன செய்வது, ஒருவேளை இந்த ஸாஸ் உங்களிடத்திலே என்னை மன்னிக்குமோ என்னமோ. அதோடு, இப்ப நேரம் என்ன?

இக்னாதவ் (தனது கடிகாரத்தைப் பார்த்துக் கொண்டு): மூன்றுக்குப் பத்து நிமிடங்கள்.

தான்யா (ஆழ்ந்த சிந்தனையோடு): மூன்றுக்குப் பத்து நிமிடங்கள். இன்ட்ரஸ்டிங், ரொம்ப இன்ட்ரஸ்டிங்...

மதியச் சாப்பாட்டுக்கு அழைக்கப்பட்டோம், அங்கே அருமையான சலாடைச் சாப்பிட்டோம்.

ஊம், உங்கள் கருத்துப்படி மூனு மணி நேரத்தில் எத்தனைக் கிலோமீட்டர்கள் கடக்க முடியும்?

இக்னாதவ்: ஏறத்தாழ இருபத்தி ஐந்து கிலோமீட்டர்கள் என்று கருதுறேன். ஏன் கேட்கிறீங்க?

தான்யா: சும்மா கேட்டேன். (சலாட் மீது ஸாஸ் ஊற்றுகிறாள்.) என்னங்க, அது எது போல இருக்கு?

இக்னாதவ் (சுவை பார்க்கிறபடி): அபாரம்!.. எப்படியும் ரொம்ப ருசியாருக்கு...

தான்யா: அதோ பார்த்தீங்களா, அலெக்சேய் இவானவிச்? ஒரு காலத்தில் நான் புகழ்பெற்ற சமையல்காரியாக இருந்தேன். (இடைவெளி.) உள்நாட்டுப் போர் முழுக்க கொரில்லாக்களோடு சேர்ந்து தைகாவில் நீங்க போரிட்டீங்க என்பது உண்மையா?

இக்னாதவ்: ஆமா, பிறகு என்ன?

தான்யா: நீங்க எப்பவாவது பனிப்புயலில் சிக்கி இருக்கீங்களா?

இக்னாதவ்: சிக்கியிருக்கேன்.

தான்யா: இது எப்படி இருந்தது?

இக்னாதவ்: நான் பிழைச்சுட்டேன், நீங்க பார்ப்பது போல.

தான்யா (முறுவலிக்கிறாள்): நீங்க பலே ஆளு தான், அலெக்கேய் இவானவிச், நீங்க பயந்தீங்களா?

இக்னாதவ்: மொத்தத்தில், ஆமாம், ஓரளவுக்குப் பயந்தேன்.

தான்யா: ஒரு முறை மாஸ்கோவின் சுற்றுப்புறத்தி லுள்ள ஸகோல்னிகி பார்க்கில் நான் வழியைத் தவற விட்டுட்டேன்... எங்கோ மிகமிகத் தொலை தூரத்து வடக்கே இருப்பதாகவும், என்னைச் சுற்றிலும் கரடிகளும் பிணந் தின்னும் பறவைகளும் இருப்பதாகவும் எனக்குத் திடீரென்று தோனுது... நான் அச்சத்தால் கதறவும் தொடங்கிட்டேன்.

இக்னாதவ்: அங்கேயிருந்து எப்படி வெளியேறினீங்க?

தான்யா: ஒரு டிராம் செல்றதைக் கேட்டேன்.

இக்னாதவ் (சிரித்துக்கொண்டு): உங்களை ஒரு துணிச்சலான தோழராகப் பார்க்கிறேன் நான்.

தான்யா (மகிழ்ச்சியோடு): என்ன நினைக்கிறீங்க, நான் ஒரு மடத்துணிச்சலான ஆள்தான். (அவள் மேசையிலிருந்து எழுகிறாள், கதவுக்குச் செல்கிறாள், தன்னுடைய மேலங்கியை விரைவாகப் போட்டுக் கொள்கிறாள்.)

இக்னாதவ்: நீங்க... நீங்க புறப்படுறீங்களா?

தான்யா: அதாவது, உங்க கருத்துப்படி, நான் 'ரோஜா'வுக்குப் புறப்பட்டுப் போயிருக்கணும், இல்லையா?

இக்னாதவ்: ஆமா. இப்ப அதுதான் உங்களுக்கு நல்லது என்பது போல எனக்குத் தோனுது. நீங்க ஏன் சிரிக்கிறீங்க?

தான்யா: உங்க வார்த்தைகளிலிருந்து பின்பு நீங்க புரண்டு போயிறக்கூடாது என்பதை நினைவிலே வச்சுக்கங்க.

இக்னாதவ்: ஆக என்றாலும்... நீங்க முடிவு செய்துட்டீங்களா?

*தான்யா (முறுவலித்தபடி):* ஆமா. என் மனசாட்சி என்னை உறுத்துதுன்னு சொல்ல முடியும்.

*இக்னாதவ்:* பிறகு என்ன, சரி... இருட்டுறதுக்கு முன்னதா உரிய நேரத்தில் நீங்க அங்கே போய்ச் சேரலாம். நான்கு மணி நேரத்தில் நீங்க முப்பது கிலோமீட்டர் தொலைவு கடக்கணும்... இன்று வெண்பனிச் சறுக்குக்கட்டைப் பயணத்திற்கு மிக அருமையான பருவநிலை.

*தான்யா:* நீங்க சொல்றது அருமையானது, அலெக்சேய் இவானவிச். நீங்க ரொம்பவும் நல்ல மனிதர், அதற்கு மிக்க நன்றி. *(இக்னாதவின் கையைக் குலுக்குகிறாள், தனது வெண்பனிச் சறுக்குக்கட்டைகளை எடுத்துக்கொண்டு கதவுக்குச் செல்கிறாள்.)* இல்லை, என்னை வழியனுப்ப வரவேணாம்! நான் அவசரமாக இருக்கிறேன். *(வெளியேறுகிறாள்.)*

*ஒருவிதக் கலக்கமுற்ற இக்னாதவ் அவள் போவதையே உற்றுக்கவனிக்கிறான்.*

## காட்சி ஏழு

*நவம்பர் ஏழு, **1938**.*

*'ரோஜா' தங்கச்சுரங்கம். பிந்திய மாலை நேரம். மரத்தாலான சிறிய கழகத்தில் 'சபாயெவ்'* என்கிற நாடகம் நடக்கவிருக்கிறது. மேடையின் பின்புறம். காட்சி*

---

* **வசிலி சபாயெவ்** — *உள்நாட்டுப் போரின் ஒரு வீரர்.* (ப-ர்.)

பொருள்களின் குழப்பத்தில் நாடக உறுப்பினர் குழு — தங்கச் சுரங்கத்தில் பணியாற்றும் இளைஞர்கள் — பொய்த் தாடிகளை ஒட்டிக்கொண்டும், ஒப்பனை செய்துகொண்டும், புகைத்துக்கொண்டும் இருக்கிறார்கள். மேடையினின்றும் நாடகத்தினுடைய இரைச்சல், இசை, பாட்டு, கர ஒலிகள் கேட்கிறது. வெளியே பனிப் புயல் சீறிக்கொண்டிருக்கிறது. மேடையிலிருந்து கீழே வரும் படிக்கட்டுகளில் பறட்டைத் தலைமயிர் இளைஞன் விரைந்து வருகிறான். அவன் அமெச்சூர் நாடகத்தின் மேடை நிர்வாகி.

பறட்டைத் தலைமயிர் இளைஞன்: அதிகாரிகளே, தளபதிகளே! மேடைக்குப் போங்க! என்னுடைய சங்கேதத்திற்குச் சபாயெவ் காத்திருக்கணும்... (மறைகிறான்.)

''சபாயெவ்'': காலநிலை இன்னைக்கு மிகச் சீர்கேடாகப் போச்சு... உலகத்திலுள்ள எல்லாப் பனியுமே நம்மைப் பார்க்க முடிவு செய்து விட்டது போல இருக்கு.

இடைவெளி.

''ஃபூர்மனவ்'': ஏய், சகோதரர்களே! என்னோட ஒப்பனைப் பொருள்கள் பெட்டியில் கெட்டியாக உறைஞ்சு போச்சு.

''சபாயெவ்'': அதை மூச்சுவிட்டு வெதுவெதுப் பாக்கிக் கொள்.

''மாலுமி'': டாக்டர் என்ன ஆனார்? யாராவது ஏதாவது கேள்விப்பட்டீங்களா?

''சபாயெவ்'' (சன்னலைச் சுட்டிக்காட்டுகிறான்): என்ன நடக்குதுன்னு பார்க்கிறாயே! ஒரு மணி

நேரத்திற்கு மேலாகப் பனிப்புயல் வீசிக்கிட்டிருக்கு... இதில் எப்படி ஒருத்தராலே வர முடியும்?

''கொரில்லாக்'' களில் ஒருவன்: நம்முடைய டாக்டர் எங்கே?

''மாலுமி'': அவர் விடுமுறையில்... கிரஸ்னயார்ஸ்க் நகரத்துக்குப் போயிருக்கார்.

அமைதி.

''சபாயெவ்'' (கண்ணாடியைப் பார்த்துக்கொண்டு): எப்படி இருக்கு? உண்மையான சபாயெவைப் போல இருக்கா?

''கொரில்லாக்'' களில் ஒருவன்: நீ சபாயெவ் போலவே அசலா இருக்கிறாய்.

கதவு திறக்கிறது. வெளியிலிருந்து காற்றும் பனியும் உள்ளே நுழைகின்றன. தாடி வைத்திருந்த மூத்த மனிதரான பஷ்னியாக் நுழைகிறான். கதவை இறுக்கமாக மூடுகிறான். தனது உடைகளில் உள்ள பனியைத் தட்டிவிடுகிறான்.

''ஃபூர்மனவ்'': ஊம், நீ அவளைப் பார்த்தாயா?

எல்லாரும் பஷ்னியாக்கைக் கும்பலாய்ச் சுற்றி நிற்கிறார்கள்.

பஷ்னியாக்: பார்த்தேன்.

இடைவெளி.

–ாலுமி'': பிறகு என்ன... சிறுவன் எப்படி இருக்கான்?

–ஷ்னியாக் (மெதுவாக): மோசம். (நீண்ட நேரம் அமைதியாக இருக்கிறான்.) சந்தேகமின்றி, ஒரு நோயை வெறுங் கண்ணால அடையாளங் கண்டறிவது மிகவும் சிரமமானது... இங்கு தேவைப்படுறதெல்லாம் ஒரு டாக்டர் பார்க்கணும் என்பதுதான்... ஒருவேளை எதுவும் மோசமானது நடக்கவில்லை.

–ாலுமி'': பொய் சொல்கிறாய், பஷ்னியாக். உண்மையைச் சொல்லு.

–ஷ்னியாக்: நான் உண்மையைத்தான் சொல்லிக்கிட்டிருக்கேன்: சிறுவன் தன்னோட சக்தி முழுவதையும் இழந்துட்டான்.

''சபாயெவ்'': சிறுவன் உண்மையாவே சாகப்போறானா? (இடைவெளி.) இலையுதிர் காலத்தில் ஓடை அருகே அவர்களைச் சந்தித்தது எனக்கு நினைவு வருது. அவளிடமிருந்து பையனை வாங்கிக்கிட்டேன், என் தோளில் வச்சுக்கிட்டேன், அவன் என்னைப் பார்த்துக் கண் சிமிட்டினான்...

''கொரில்லாக்'' களில் ஒருவன்: அற்பம்!

''சபாயெவ்'': ஆமாம், அது தான் உண்மை, அவன் கண் சிமிட்டினான். ஒரு பெரிய ஆளைப் போல அவன் அசைந்து கொண்டே இருந்தான்.

இடைவெளி.

''மாலுமி'': ஆமா... இந்நேரத்திலே முந்திய வீரம் இல்லே... இப்ப சபாயெவ் ஒரு டாக்டராக இருந்திருந்தா, எந்தப் பனிப்புயலையும் நொடிப்

பொழுதில் கடந்து வந்திருப்பார்.

''ஃபூர்மனவ்'': இதைச் சொல்லிப் பயன் என்ன?

*அமைதி. பறட்டைத் தலைமயிர் இளைஞன் உள்ளே ஓடி வருகிறான், காது செவிடாகும் படியாக மேடைத் துப்பாக்கியால் குண்டு வெடிக்கிறான்.*

பறட்டைத் தலைமயிர் இளைஞன்: நீங்க மேடைக்கு அப்பால் கத்தணும்!

''சபாயெவ்'' (படிகளில் ஓடிவந்து கொண்டு): தோழர் சபாயெவ் வீரர்களே, உங்களுடைய கமாண்டர் சொல்றதைக் கேளுங்கள்! உங்களோட எல்லா பலத்தையும் கொண்டு கடைசி மனிதன் வரை போரிடுங்க! செம்படையினர் நமக்கு உதவுறதுக்காக வந்துக்கிட்டிருக்காங்க... அவர்கள் மிக நெருக்கமா வந்துட்டாங்க, முன்னே முன்னேறுங்க, அன்புள்ள போர்வீரர்களே!

எல்லாரும்: முன்னேறுங்க! சபாயெவ் நீடூழி வாழ்க! உர்ரா!

*மேடை எந்திரத் துப்பாக்கியின் வெடிப்பு. மேடைக்குப் பின் போர் எச்சரிக்கை தாரை ஒலி. கதவு திறக்கிறது. வெளியே புயற்காற்று சீறிக்கொண்டிருப்பது கேட்கிறது. தனது கைகளில் தான்யாவைச் சுமந்தபடி ஓர் உயரமான இளைஞன் வாசற் படியில் தோன்றுகிறான். மெதுவாக உள்ளே நுழைகிறான், ஓர் அகலமான பெஞ்சின் மீது அவளைக் கிடத்துகிறான்.*

இளைஞன்: கொஞ்சம் பனி கொண்டு வாங்க! (களைப்பில் ஆழ்ந்தவனாக ஒரு முக்காலி மீது அமர்கிறான்.)

பஷ்னியாக் ஒரு சின்ன வாளியில் பனி கொண்டுவருகிறான். ''கொரில்லாக்கள்'' பெஞ்சைச் சுற்றிலும் நிற்கிறார்கள். ''ஃபூர்மனவ்'' தான்யாவின் மேலங்கியைக் கவனமாகக் கழற்றுகிறான்.

''மாலுமி'' (வியப்புற்றபடி): அது ஒரு பெண், இளைஞர்களே!..

பஷ்னியாக்: நான் அவளை இதற்கு முன்னமே எங்கோ பார்த்திருக்கேன்... என் உயிர் மீது ஆணையாக, நான் சொல்லாட்டா.

இளைஞன்: பனியால் இவள் முகத்தைத் தேயுங்க... அவளது கைகளையும்...

''ஃபூர்மனவ்'': இந்தப் பெண் யார், இவான்? நீ இவளை எங்கே கண்டுபிடித்தாய்?

இளைஞன்: ஊருக்கு அருகில் தான். இவள் நகரத்திலிருந்து வெண்பனிச் சறுக்குக்கட்டைகளில் வந்திருக்கலாம், பிறகு பனிப்புயல் வீசியிருக்கு... நான் கடைசி மரக்குடிசைகளுக்கு நடந்து போய்க்கிட்டிருந்தேன், யாரோ பனியில் தவழ்ந்துகொண்டிருப்பதைத் திடீரென்று கவனிச்சேன்... ''என்ன நடக்குது?'' நான் வியந்தேன். இவளை நோக்கிப் போனேன், அவளோ நினைவிழந்து கிடந்தாள்.

''மாலுமி'': யார் இவள்? எங்கே போய்க்கிட்டிருந்தாள்?

இளைஞன்: எனக்குத் தெரியாது...

''சபாயெவ்'' (தான்யாவின் பையிலிருந்து ஒரு தர்மாமீட்டரை எடுத்துக்கொள்கிறான்): ஒரு தர்மாமீட்டர், இளைஞர்களே! (இடைவெளி.)

பஷ்னியாக் (தான்யாவின் முகத்தைக் கூர்ந்துபார்க்



9–1006

கிறான்): பொறுங்க, பொறுங்க! எனக்கு இப்ப நினைவுக்கு வந்துருச்சு... அது அவள்... அது அவளே தான்! நகரத்தில் இருக்கிற மருத்துவ மனைக்கு நான் போயிருந்தப்ப, அங்கே இவள் இருந்தாள்... (கத்துகிறான்.) பையன்களே... இது டாக்டர்!

''மாலுமி'': எங்கே?

பஷ்னியாக்: இதோ இவள்... டாக்டர்!

''சபாயெவ்'': பொய் சொல்கிறாய்!

''மாலுமி'': அவளா? இந்த மங்கையா?

பஷ்னியாக்: நான் ஓடிப் போய்... அவர்களிடம் டாக்டர் பத்திச் சொல்றேன்... இவான் டாக்டரைக் கொண்டுவந்தான்னு.

இளைஞன்: நானும் உன்னோடு வாறேன்.

*அவர்கள் விரைந்து ஓடுகிறார்கள்.*

''மாலுமி'': ஓ நீ, அழகிய சிறு பெண்ணே! (தான்யாவை அணைத்துக்கொண்டு அவளை முத்தமிடுகிறான்.) ஓ, நீ... நீதான் உண்மையான சபாயெவ்!..

பறட்டைத் தலைமயிர் இளைஞன் (மேசையின் மீது தனது கை முட்டியால் தட்டிக் கொண்டு): என்ன செய்துக்கிட்டிருக்கே? மூளை ஏதாவது கோளாறா உனக்கு?

''மாலுமி'': போ அப்பாலே...

பறட்டைத் தலைமயிர் இளைஞன்: அமைதி! அமைதி! (அரங்கின் ஓரத்துக்கு ஓடுகிறான், கவனிக்கிறான்.) அது தான்! நாம் அரங்கத்திற்குப் போகக் கிட்டத்தட்ட தாமதிச்சுட்டோமே!..

கொரில்லாக்கள் மேடைக்குப் போகணும்! எல்லாரும் மேடைக்குப் போங்க! சபாயெவ் முதலாவதா, பிறகு ஃபூர்மனவ், அதன் பிறகு மற்ற வீரர்கள்! எல்லாரும் விரைவாப் போங்க!

எல்லாரும் மேடை நோக்கி ஓடுகிறார்கள். பறட்டைத் தலைமயிர் இளைஞன் தான்யாவுக்கு மேலாகக் குனிகிறான்.

(அமைதியாக.) கண்ணைத் திறங்க, தயவு செய்து, ஏதாவது சொல்லுங்க... நீங்க வந்துட்டீங்க. இருப்பினும் நீங்க வந்துட்டீங்களே...

சபாயெவுக்கு மிகப் பிடித்தமான பாட்டு மேடையிலிருந்து கேட்கிறது:

''அண்டங் காக்கையே அந்தரத்தில் வேணாம்,
மண்டைக்கு மேலே பறக்கவும் வேணாம்,
கிட்டவோ இல்லை கொத்திடப் பிணமும்
முட்டியும் மோதியும் வாழ்கிறேன் நிதமும்...''

தான்யா தன் விழிகளைத் திறக்கிறாள், மெதுவாகப் பாதி அமர்கிறாள், அச்சமுற்றபடி சுற்றிலும் பார்க்கிறாள்.

தான்யா: என்ன இது? எனக்கு விளங்கலே...

பறட்டைத் தலைமயிர் இளைஞன் (மகிழ்ச்சியோடு அவளைப் பார்க்கிறான்): பாருங்க, இருப்பினும் நீங்க வந்துட்டீங்க! நீங்க டாக்டர், இல்லையா?

தான்யா: ஆமா. இது 'ரோஜா' தங்கச் சுரங்கம் தானே?

பறட்டைத் தலைமயிர் இளைஞன்: ஆமாம்.

தான்யா: ஏன் அவுங்க பாடிக்கிட்டிருக்காங்க?

பறட்டைத் தலைமயிர் இளைஞன்: இப்படித்தான் இருக்கணும். (இடைவெளி.) உங்களுக்கு நல்லா இல்லாதது போல இருக்கு, இல்லையா?

தான்யா: இல்லை... எனக்குக் குணமாயிருக்கு... என்னோட காலைத் தவிர... நான் இதை மிக மோசமா வெட்டிக்கொண்டிருக்கேன். (இடைவெளி.) என்னோட வெண்பனிச் சறுக்குக்கட்டைகள் எங்கே?

பறட்டைத் தலைமயிர் இளைஞன்: நீங்க வருத்தப்பட வேணாம். நான் புதுசா ஜோடு உங்களுக்குப் பரிசளிப்பேன். அவை போல வேறு யாரிடத்திலுமே கிடையாது.

தான்யா (குழப்பிக்கொண்டிருக்கிறாள்): நன்றி.

பறட்டைத் தலைமயிர் இளைஞன்: உஸ்! (மேடையில் என்ன நடைபெறுகிறது என்பதைக் கேட்கிறான், பிறகு மேடைத் துப்பாக்கியை இரண்டு முறை வெடிக்கிறான்.)

தான்யா: என்ன செஞ்சுக்கிட்டிருக்கீங்க?.. இதெல்லாம் எதுக்கு?

பறட்டைத் தலைமயிர் இளைஞன்: இது உள்நாட்டுப் போர். சபாயெவ்—புரிந்ததா உங்களுக்கு?

தான்யா: நான் போகணும். எழுந்து நிற்க உதவுங்கள்... தங்கச் சுரங்க இயக்குநரை நான் பார்த்தாகணும். (எழுவதற்கு முயற்சிக்கிறாள்.) இல்லை... என்னால் முடியாது... எனக்கு வலியுண்டாகிற மாதிரி இருக்கு.

*கதவு திறக்கிறது. ஓட்டமாக பஷ்னியாக் உள்ளே நுழைகிறான், அவனைப் பின்தொடர்ந்து ஷமானவா வருகிறாள்.*

பஷ்னியாக்: இங்கு தான் இருக்கிறாள்...
ஷமானவா (நெருக்கமாகப் பார்த்துக்கொண்டு): தான்யா?!
தான்யா (கலக்கத்தோடு): நீங்களா? என்ன இது? ஏன்?

*அவர்கள் ஒருவரையொருவர் அமைதியாகப் பார்த்துக்கொள்கிறார்கள்.*

ஷமானவா: நீங்க... நீங்க ஹேர்மனைப் பார்க்கவா வந்தீங்க?
தான்யா (கிலியால்): அவர் இங்கா இருக்கார்?
ஷமானவா: இல்லை... அவர் மாஸ்கோவில், ஆனா நாளை இங்கு புறப்பட்டுவாரார்... ஏதாவது நடந்துட்டதா? இரவில், இந்தப் பனிப்புயலில் ஏன் வந்தீங்க?..
தான்யா (கத்துகிறாள்): பொறுங்க! நீங்க தான் 'ரோஜா'வின் இயக்குநரா?
ஷமானவா: ஆம்...
தான்யா: அப்பையன்... ஹேர்மனுடையவனா?
ஷமானவா: ஆம். ஆனா டாக்டர் எங்கே? நீங்க அவரோடு வந்தீங்களா? (இடைவெளி.) சொல்லுங்க என்னிடம், தான்யா...
தான்யா (ஆதரவற்றவாறு): நான் தான் டாக்டர்... நான்... நான்... நான்...
ஷமானவா: நீங்களா? (தான்யாவிடம் ஓடிச்

சென்று அவளை மௌனமாக முத்தமிடுகிறாள்.)

தான்யா (அமைதியாக): அவன் ரொம்பவும் முடியாமல இருக்கிறானா?

ஷமானவா: ஆமா.

தான்யா: அவன்... மகனின் பெயரென்ன?

ஷமானவா: யூரி.

தான்யா: யூரி... (மெதுவாக.) ஆமா... அவனை எப்பவுமே யூரி என்று கூப்பிடவே ஹேர்மன் விரும்பினார்.

ஷமானவா (வியப்போடு): அவனையா?

தான்யா: அவரது மகனை.

''சபாயெவ்'', ''ஃபூர்மனவ்'', ''மாலுமி'', ''கொரில்லாக்கள்'' படியிலிருந்து இறங்கி வருகிறார்கள்.

அவனிடம் என்னைக் கூட்டிப்போங்க... கவனம், என் காலில் ஏதோ வலிக்கிறது... இல்லை, பரவயில்லை, நானே அங்கே போக முடியும்.

மன்றத்திலிருந்து கைதட்டல் கேட்கிறது. ''கொரில்லாக்கள்'' தான்யாவிற்கு வழி விடுகிறார்கள்.

## காட்சி எட்டு

நவம்பர் பதினைந்து, **1938**.

'ரோஜா' தங்கச் சுரங்கம். சுரங்க நிர்வாகத்தின் மரத்தாலான வீட்டில் ஷமானவாவின் சிறிய வெளிச்சமான அறை. பளிச்சென்று பனியால் மூடப்பட்டுள்ள குடியிருப்

பைச் சன்னல் வழியாகப் பார்க்க முடிகிறது. அது அதிகாலை நேரம். ஒரு குழந்தைக் கட்டிலுக்கு அருகே தான்யா ஒரு முக்காலியில் அமர்ந்திருக்கிறாள். தனது தலையைக் கைகளின் மீது வைத்தபடி அரைத் தூக்கத்தில் அமர்ந்திருக்கிறாள். கதவு வாயிற்படியில் இக்னாதவ் தோன்றுகிறான். வாயிற்படியிலேயே நின்று, தூங்கிக்கொண்டிருக்கும் தான்யாவை மௌன மாகப் பார்க்கிறான்.

தான்யா (விழித்தெழுந்து கொண்டு, இக்னாதவைக் கவனித்து விடுகிறாள்): அலெக்சேய் இவா னவிச், நீங்களா? நானோ அரைத் தூக்கத்தில் இருந்தேன்... இங்கே என்ன காரியமாக வந் தீங்க?

இக்னாதவ் (அவன் உண்மையாகவே கிளர்ச்சி யுற்று இருக்கிறான், ஆனால் அதைக் காட்ட விரும்பவில்லை): இதோ பாருங்க... ஒரு வேலை நிமித்தமா தங்கச் சுரங்கத்திற்கு வந்தேன். ஊம், உங்களையும் பார்த்து விடுவதென்று ரொம்ப விரும்பினேன்... நீங்க நல்லா இருக்கீங்களா என் பதைப் பார்க்க விரும்பினேன்.

தான்யா: கொஞ்சம் முன்னாலேதான் உங்களைப் பற்றிக் கனவு கண்டுக் கிட்டிருந்தேன் — நீங்க எனக்குத் தேநீர் கொடுத்துக்கொண்டிருந்தீங்க, ஏதோ காரணமாகக் கோபமாகவும் இருந்தீங்க.

இக்னாதவ் (பத்திரிகையின் ஒரு நறுக்கை எடுத் துக்கொண்டு): இதோ, உங்களைப் பத்தி பத்தி ரிகையில் இருக்கு... இது கிரஸ்னயார்ஸ் கிலிருந்து அனுப்பப்பட்டது. "டாக்டரின் அருஞ் செயல்" என்ற கட்டுரை, ஒரு புகைப்படம் கூட...

தான்யா: அவர்கள் இப்புகைப்படத்தை எங்கிருந்து பெற்றார்கள்? அச்சந்தருவது மாதிரி இருக்கிறது, என்ன பேதமை!

இக்னாதவ்: உங்களோட அலுவலக தஸ்தாவேஜு களிலிருந்து அவர்கள் அதை எடுத்திருக்காங்க. வேறு எங்கிருந்து பெற முடியும்? (புகைப்படத் தைப் பார்க்கிறான்.) உண்மை, நீங்க இதில் ஏனோ நிமிர்ந்த மூக்குடையது மாதிரி காணப் படுறீங்க.

தான்யா: நிமிர்ந்த மூக்கா? (முறுவலித்தாள்.)

இக்னாதவ்: கோபப்பட வேணாம், தத்யானா அலெக்சேயெவ்னா, ஆனா நான் இக்கட்டுரை யை உங்கள் பெற்றோர்க்கு அனுப்பியிருக்கேன். எங்களைப் போலவே அவர்களும் பெருமைப் படட்டும்.

தான்யா: நன்றி.

இக்னாதவ்: உங்களிடம் ஒன்னை மட்டும் என் னால மன்னிக்க முடியாது: காலநிலை அறிவிப் பை நீங்க கேட்டதை அந்நேரத்தில் என்னிடம் ஏன் சொல்லலே?

தான்யா (முறுவலித்தபடி): ஆனா நீங்க பனிப்புய லைப் பத்தி அறிந்திருந்தால், என்னைப் போக விட்டிருக்க மாட்டீங்க...

இக்னாதவ்: யாருக்குத் தெரியும்? நான் உங்க ளோடு வந்திருப்பேன், என்னமோ.

தான்யா: அலெக்சேய் இவானவிச், ஏன்னா கடைசி யில் பத்திரிகையிலே என்னைப் பத்தித்தான் புகழ்ந்தெழுதி இருக்காங்க, உங்களைப் பத்தி இல்லேன்னு நீங்க பொறாமைப் படுறதை என் னால காண முடியும்.

இக்னாதவ்: நீங்களோ என்னித்திலே உங்களோட மேலதிகாரியிடம் பேசுவது மாதிரி முழுவதுமே பேசலே, துணிச்சலாப் பேசுறீங்க என்பதைப் பார்க்கிறேன். தயவு செய்து நகரத்தில் உங்களோட பணிக்குத் திரும்பிருங்க. ஒரு வாரம் முழுக்க நீங்க இங்கேயே இருக்கீங்க. இல்லை, இல்லை, வீடு திரும்புறதுக்கு நேரம் வந்துருச்சு, தோழர் டாக்டர்! என்னன்னு உங்களுக்குத் தெரியும்? இன்னும் ஒரு மணி நேரத்தில் என்னோட வேலைகளை நான் முடிச்சிருவேன்... நாம் சேர்ந்தே போகலாம், என்ன?

தான்யா (தயக்கத்துடன்): ஒருவேளை நான் தங்குவேன்.

இக்னாதவ்: ஏன்? பையன் தான் நல்லா இருக்கானே.

தான்யா: ஆமா, அவன் நல்லா இருக்கான். (சற்று நேர அமைதிக்குப் பிறகு.) உங்களுக்குச் சொந்தமா ஒரு மகன் ஒருபோதும் இருந்தது கிடையாதா, அலெக்சேய் இவானவிச்?

இக்னாதவ்: இல்லை.

தான்யா: ஏன் என்று எனக்குத் தெரியாது, ஆனா ஏதோ சில காரணத்தால குழந்தையை விட்டுப் பிரியுறது பிரிவு வேதனையைத் தருது.

இக்னாதவ்: ஆனா இவன் மற்றவருடையவன் தானே!

இடைவெளி.

தான்யா: மற்றவருடையவனா?.. இவன் அப்பா இன்னைக்குத் திரும்பி வந்து கொண்டிருக்கார்...

இக்னாதவ்: அவரை உங்களுக்குத் தெரியுமா?
தான்யா: ஆம். (இடைவெளி.) அவர் தான் என்னோட கணவராக இருந்தார்.
இக்னாதவ்: பலஷோவ்?

*தான்யா அமைதியாக இருக்கிறாள். இக்னாதவ் நீண்ட நேரம் அவளை உற்றுப்பார்க்கிறான்.*

தான்யா: உங்களுக்கு நினைவிருக்கும், அவரைச் சந்திப்பது பற்றி ஒரு வாரத்திற்கு முன்னால நான் கனவு கண்டுகொண்டிருந்தேன், ஆனா இப்ப... இல்லை! நான் போயாகணும்.
இக்னாதவ் (உறுதியாக): நீங்க தங்கணும்! அவரைப் பார்க்காமலேயே போவது... இது கோழைத்தனமா இருக்கும்...
தான்யா: ஆம், நான் இச்சந்திப்புக்கு அஞ்சுகிறேன். அவர் முகத்துக்கு, கண்களுக்கு, குரலுக்கு அஞ்சுறேன். நீங்க இங்கே, எனக்குப் பக்கத்திலேயே இருந்ததன் மூலம், இங்கே வந்ததன் மூலம் எவ்வளவு நல்ல காரியத்தைச் செய்திருக்கீங்க, என் அரிய அலெக்சேய் இவானவிச். நீங்க எனக்குச் சொல்லிக் கொடுக்கணும்... உங்களை நம்புறதுக்கு மட்டுமே நான் விரும்புறேன், கேட்டீங்களா?
இக்னாதவ்: நன்றி உங்களுக்கு. ஆனா தற்போதைக்கு ஓர் ஆலோசகரா அவ்வளவு பயன்பட மாட்டேன் போலத் தெரியுது. உங்களுக்குச் சொல்லிக் கொடுக்கணும்னு நீங்க சொல்லிக் கொண்டிருந்தீங்க? இல்லை, தத்யானா அலெக்சேயெவ்னா, இந்த முறை உங்களுக்கு அவ்வளவு

உதவிகரமாக இருக்க முடியாதுன்னு அஞ்சு கிறேன்.

தான்யா: ஏன்?

இக்னாதவ்: ஏன்னா நான்... (நகைக்கிறான்.) கதையைச் சுருக்கமாச் சொன்னால், இன்னைக்கு உங்களுக்கு நான் ஒரு மோசமான ஆலோசகன் தான். (சீற்றத்தோடு.) சைத்தான்! ஆயினும் இது பிதற்றல்... (அவள் கைகளை எடுத்துக்கொள்கிறான்.) ஒன்னே ஒன்று மட்டும் நான் விரும்புறேன்... நீங்க மகிழ்ச்சியாக இருக்கணும். துணிவோடு இருக்க முயலுங்க, அவ்வளவுதான். பலத்தோடு இருக்கிறவனுக்கு மட்டுமே மகிழ்ச்சி.

தான்யா (அமைதிக்குப் பிறகு): அலெக்சேய் இவானவிச், உங்களோட கருத்துப்படி மகிழ்ச்சி என்பது என்ன?

இக்னாதவ் (முறுவலித்தபடி): ஆம், உண்மையான மகிழ்ச்சி என்ன என்பதை ஒரு வாரத்திற்கு முன்னாலேதான் கண்டுபிடிச்சேன், சலாட் உடன் உங்களோட ஸாசை சுவைத்த போது...

தான்யா: உங்களிடம் கண்டிப்பான முறையில் கேட்டேன், நீங்களோ அதைக் கேலியாக எடுத்துக்கிறீங்க.

இக்னாதவ்: என் இனிய தத்யானா அலெக்சேயெவ்னா, கொஞ்சம் முன்னாலே நான் உங்ககிட்டே என்ன சொன்னேன் என்பதிலுள்ள கண்டிப்பை உங்களாலே கற்பனை செஞ்சு கூடப் பார்க்க முடியாது. (இடைவெளி.) போய் வாறேன். (விரைந்து வெளியேறுகிறான்.)

*தான்யா தனிமையில் விடப்பட்டிருக்கிறாள். சன்ன லுக்கு அருகில் நிற்கிறாள். முற்றத்தைக் கடந்து இக் னாதவ் செல்வதைக் கவனிக்கிறாள். பிறகு, முறு வலித்தபடி தனது தலையை ஆட்டுகிறாள். குழந்தை யின் கட்டிலை நோக்கி மெதுவாகச் செல்கிறாள், ஒரு முக்காலியில் அமர்கிறாள். வெளியிலிருந்து ஷமா னவா நுழைகிறாள்.*

ஷமானவா: காலை வணக்கம்! அதிகாலையிலி ருந்தே சுரங்கத்தைச் சுற்றி ஓடி வந்துகொண் டிருக்கேன். யூரி உடம்புக்கு சரியில்லாமப் போன போது, மலைமலையாகக் காரியங்கள் ஒன்றாகக் குவிந்து போச்சு. *(தன்னுடைய மென்மயிர் ஜாக் கெட்டைக் கழற்றிவிட்டு, மேசைக்குச் செல் கிறாள்.)* தேநீர் அருந்தினீங்களா?

தான்யா: ஆமா. கொஞ்சம் முன்னாலே யாரை யாவது நீங்க சந்திச்சீங்களா?

ஷமானவா: இல்லையே...

தான்யா: இக்னாதவ் இங்கிருந்தார்.

ஷமானவா: ஓ! அப்படியானால் நாம் சீக்கிரமா வே காலைச் சாப்பாட்டைக் கொள்ள வேண்டும். அந்தத் தோழர், அதிக நேரம் காத்துக்கொண் டிருக்கிறதை விரும்ப மாட்டார். *(விரைந்து தேநீர் அருந்துகிறாள், இன்னமும் நின்று கொண் டே இருக்கிறாள்.)*

தான்யா: அவரை ரொம்பக் காலமா உங்களுக்குத் தெரியுமா?

ஷமானவா: நினைவு தெரிந்த நாள் முதலா. நாட்டின் ஒரே பகுதியிலிருந்து நாங்க வந்தோம், மாஸ்கோவில் ஒன்னாவே படிச்சோம்... நான்

மங்கையாக இருந்தபோது அவரைக் காதலிச் சேன்னு கற்பனை செய்தேன். ஆனா பிறகு, கட்சிப் பணியில் அவர் இருந்தப்ப, என்னோட தஸ்தாவேஜுக் கோவையில் மேலதிகாரியின் கண் டனம் செய்தார். மொத்தத்தில், நீங்க பார்ப்பது போல, அவரைப் பற்றி ஓரளவு ஒருவித உளப் பதிவுகளைக் கொண்டிருக்கேன்.

தான்யா: அந்தக் கண்டனம் எதற்காக?

ஷமானவா: அப்போது நான் ஒரு வாயைப் பிளந்த பெண்ணாக இருந்தேன். (அமைதிக்குப் பிறகு.) இன்று யூரி ஏதாவது சாப்பிட்டானா?

தான்யா: ஆமா.

ஷமானவா (கட்டிலுக்குப் போய்க் கொண்டு): அவன் ஒரு கரடிக்குட்டி போலக் காணப் படுறான், இல்லையா?

தான்யா: ஆமா, அவன் வேடிக்கையானவன்.

ஷமானவா: ஒருவகையில் அவன் இன்னும் கொஞ் சம் பருமனாக இருக்க முடியும்.

தான்யா: அப்பப்பா! அவன் கால்கள் எவ்வளவு பருத்து இருக்கு...

ஷமானவா: அவன் நன்றாகத் தூங்குகிறான்.

தான்யா: அவன் கெட்டிக்காரன். (அறையைச் சுற் றிலும் பார்க்கிறாள்.) விநோதமா இருக்கு. நான் தூஸ்யாவோடு வசித்த அறையைப் போலவே இது இருக்கு... கட்டில் கூட அதே தான் இருக்கு.

ஷமானவா: யாரோட கட்டில்?

தான்யா: எங்க பக்கத்து வீட்டுக்காரங்க ஒரு குழந்தை வச்சிருந்தாங்க. (இடைவெளி.) எங்க ளோட சிறுமி தூஸ்யாவை உங்களுக்கு நினை விருக்கா? அவள் இப்ப புவி இயல் இன்ஸ்டி

டியூட்டில் மாணவி... நானோ இங்கே... உங்களோட வீட்டில் விருந்தாளியாயிருக்கேன். இந்த உலகத்திலே எல்லாமே எப்படி வியப்பானதா இருக்கு, இல்லையா?

ஷமானவா (அமைதிக்குப் பிறகு): தான்யா... நீண்ட நாளாவே உங்ககிட்டே சொல்ல வேண்டும்னு நினைச்சுக்கிட்டிருக்கேன்... ஆனா ஆரவாரமான சொற்றொடர்களை நான் விரும்பலே. நீங்க இதயபூர்வமா என்னைப் புரிஞ்சுக்க விரும்புறேன். நான் உங்களுக்கு ரொம்ப நன்றிக்கடன் பட்டிருக்கேன். ரொம்ப நன்றியுள்ளவளாக இருக்கேன்... ஒரு குழந்தையை இழக்கிறது பயங்கரமான விஷயம். இதை என்னால விளக்கிச் சொல்ல முடியலே, உண்மையில் நீங்க என்னைப் புரிஞ்சுக்கவும் முடியாது... ஆனா...

தான்யா: நான் புரிஞ்சுக்கிட்டேன்.

இடைவெளி.

ஷமானவா: தான்யா... நீங்களும் நானும் இப்ப நண்பர்கள், அப்படித்தான் இல்லையா? ஹேர்மனை நீண்ட காலமாய் நீங்க காதலிக்கலே. உங்களுக்கும் அவருக்கும் இடையே இருந்தது மறந்து போச்சு, மேலும்... என்னிடம் உண்மையைச் சொல்லுங்க. நீங்க ஏன் ஹேர்மனை விட்டுப் பிரிஞ்சீங்க? (இடைவெளி.) அவரோட தங்கத் தூர்வாரியின் இணைப்பைப் பார்வை இடுவதற்காக அவர் இங்கு வரவேண்டியவராக இருந்தார். உங்க இரண்டு பேரையும் நான் எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன், ஆனா அவர் மட்டுமே தனி

யா வந்தார். நீங்க அவரைப் பிரிந்துவிட்ட தாக அவர் சொன்னார்... ஒரு வார்த்தைக் கூடக் கூறாமல் அவரைப் பிரிஞ்சிட்டீங்க. ஏன் ஒன்னுமே சொல்லாமல் இருக்கீங்க? அவர்... எங்கிட்டே இருந்து எதையாவது அவர் மறைக் கிறாரா?

இடைவெளி.

தான்யா: இல்லை. அவர் உண்மையைச் சொல்லி இருக்கார். என் சொந்த விருப்பத்தின் பேரி லேயே நான் அவரை விட்டுப் போனேன்.

ஷமானவா: அது எப்பவுமே எனக்கு விசித்திரமா கவே தென்பட்டது... நீங்க அவரிடம் மிக அதிகமான காதல் கொண்டிருந்தீங்க.

தான்யா: ஆமா... ஆனா எல்லாமே ஒரு முடிவுக்கு வந்துருச்சு, இல்லையா?

ஷமானவா (மனக்கவலையாக): நீங்க... நீங்க எங் கிட்டே எல்லாத்தையுமே கூற விரும்பலே, தான் யா! (அவளை உற்றுப்பார்க்கிறாள்.) எங்கேனும் முடியுமா...

தான்யா: இல்லை, இல்லை... எதுக்காகவும் நீங் களே உங்கள் மீது குற்றம் சாட்டக் கூடாது. அது வெறுமனே நான்தான்... ஆமா, ஆமா, நான் ஒரு மனிதனிடம் மயங்கினேன். அது மிகவும் முட்டாள்தனமான கதை... அவன் பெயர் அந்திரேய் தராஸவிச்... நான் அவனுக் காக அமைப்புப்படங்களை வரைஞ்சேன், அவன் என்னைத் தன்னோடு பெலோருஷ்யாவிற்குக் கூட்டிப் போக விரும்பினான்... இருந்தாலும்,

அது உங்களுக்குச் சுவையானதாக இருக்காது, இது பற்றி ஹேர்மனிடம் கூற வேணாம். அவரிடம் கூற வேணாம், சரியா? அது அவருக்குத் துன்பம் செய்யும், உண்மையா?

வெளியே குரல்கள் கேட்கின்றன.

ஷமானவா (கேட்டுக்கொண்டு): ஹேர்மன்!

இரைச்சலோடு கதவு திறக்கிறது. ஹேர்மன் உள்ளே ஓடி வருகிறான். தனது கைப்பெட்டியைக் கீழே எறிகிறான். ஷமானவாவிடம் சென்று அவளை நெருக்கமாக முத்தமிடுகிறான்.

ஹேர்மன்: அவன் தூங்குறானா?

ஷமானவா: அவன் உடல் நிலை நல்லா இருக்கு...

ஹேர்மன்: எனக்குத் தெரியும்... அவனை எழுப்பு!

ஷமானவா (மெதுவாக): உனக்குப் பைத்தியம் பிடித்து விட்டது.

ஹேர்மன்: ஓ, வா, மரீயா, தயவு செய்து, அவனை எழுப்பு... ஏழு நாளா நான் பயணம் செய்துக்கிட்டிருக்கேன்!.. இது பத்திப் பேசுவது முடியாது... யூரி எப்படிச் சிரிப்பான், நான் அவனை எப்படி முத்தங்கொடுக்கிறேன்னு வழி நெடுகிலும் நினைத்துக் கொண்டே வந்திருக்கேன். (கட்டிலுக்கு மேலாகக் குனிகிறான்.)

ஷமானவா: ஹேர்மன், நான் உன்னைக் கேட்டுக்கொள்கிறேன்...

ஹேர்மன்: டாக்டர் எங்கே? பஷ்னியாக் எல்லாத்தையும் எனக்குச் சொல்லிட்டான். அவள்

இன்னமும் போயிறலே? (ஆர்வத்துடன்.) அவள் என்ன அருமையான பெண்ணா இருக்கா, மரீயா, இல்லையா? நான்... நான் அவளை முத்தமிடுவேன், அவளை மிக நெருக்கமாகத் தழுவிக் கொள்வேன்...

*தான்யா அடுப்புக்குப் பின்புறமிருந்து வெளியே வருகிறாள். அவள் ஹேர்மனைப் பார்க்கிறாள்.*

தான்யா! நீ இங்கு ஏன்?.. ஏதாவது நடந்துருச்சா?

ஷமானவா (முறுவலிக்கிறாள்): இது தான்... டாக்டர்.

ஹேர்மன்: நீயா?!

*ஷமானவா தனது மென்மயிர் ஜாக்கெட்டை அணிந்து கொண்டு கதவுக்குச் செல்கிறாள்.*

ஷமானவா: இக்னாதவ் வந்திருக்கார். ஏதாவது ஆரவாரம் செய்யத் தொடங்கிருவாரோன்னு அஞ்சுறேன். நான் சீக்கிரமே திரும்பிவிடுவேன்... (வெளியேறுகிறாள்.)

தான்யா: ஆக... நாம் மீண்டும் ஒன்னு சேர்ந்துட்டோம்...

ஹேர்மன்: இதெல்லாமே மிகவும் எதிர்பாராதவை... யூரிக்கு உடல் நலமில்லாது போனதும், நீயும் இங்கு, எங்க வீட்டிலே இருக்கிறாய்... மெய்யாகவே, இதெல்லாம் ஒரு கனவு போல இருக்கிறது.

தான்யா: ஆமா. ஆனா அர்பாத் தெருவில் எண்

பதினான்கு வீட்டிலே நாம் மீண்டும் கண் விழிக்க மாட்டோம்...

ஹேர்மன்: குடியிருப்பு ஏழு.

தான்யா: ஆறு. (இடைவெளி.) இப்போது அங்கே யார் குடியிருந்து வாராங்க என்பது ஆர்வமாக இருக்கு.

ஹேர்மன்: எனக்குத் தெரியாது. (மேசையின் மீதுள்ள பத்திரிகை நறுக்கைக் கவனிக்கிறான்.) இதென்ன?

தான்யா: ஒன்றுமில்லை... அற்பக்காரியம். (நறுக் கைத் தனது பையில் போட்டுக்கொள்கிறாள்.)

ஹேர்மன்: ஆக, எனினும் ஒரு டாக்டராகி விட் டாய்?

தான்யா: நீ பார்ப்பது போல.

ஹேர்மன்: நீண்ட காலமாக வேலை பார்த்து வருகிறாயா?

தான்யா: இது என்னோட இரண்டாமாண்டு.

ஹேர்மன்: ஏன் இந்தப் பகுதியைத் தேர்ந் தெடுத்தே?

தான்யா: எப்படியோ இது ஏற்பட்டுப்போச்சு.

ஹேர்மன்: முன்னதாக நாம் சந்தித்துக்கொள்ளா தது விசித்திரமானது தான்.

தான்யா: இது என்னுடைய வரம்புக்குட்பட்டது அல்ல. (இடைவெளி.) ஊம், உன்னோட கண்டு பிடிப்புகள் எந்த நிலையில் இருக்கு? அல்லது நீ உன்னுடைய அமைப்பாளனின் வேலையை விட்டு விட்டு பயிற்சி செய்யுற என்ஜினியரா மாறிட்டே?

ஹேர்மன்: நீ கூறுவது தவறு: என்னோட புதிய மாதிரியின் சோதனைக்காக நான் மாஸ்கோ வுக்குப் போனேன். (ஓர் அமைப்புப்படத்தை

அவளிடம் காட்டுகிறான்.) இதோ... பாரு...

தான்யா: என்ன இது?

ஹேர்மன்: பனி உறைந்து போன தரையை உருக்கக்கூடிய ஓர் எந்திரம்.

தான்யா: வந்து... உனக்காக அமைப்புப்படங்கள் வரைந்து கொடுத்தது யார்?

ஹேர்மன்: அந்தோ, இங்கே அதற்காக ஒரு மீசைக்காரன் இருக்கிறான்.

தான்யா சிரிக்கிறாள்.

ஏன் சிரிக்கிறே?

தான்யா (சிரித்துக்கொண்டு): எனக்குத் தெரியாது...

ஹேர்மன்: நீயோ நிறையவே மாறிப்போயிட்டே... உன்னை அடையாளந் தெரிவது கூட கஷ்டமா இருக்கு. நீ திருமணம் செய்துகொண்டாயா?

தான்யா: நானா?

ஹேர்மன்: ஏன் ஆச்சரியப் படுறே?

தான்யா: இந்த எண்ணமே ஒருவகையில் எனக்கு... வேடிக்கையாகப் பட்டது.

இடைவெளி.

ஹேர்மன்: எவ்வளவு விநோதமா அது நடைபெற்றது — நான் வந்து சேர்ந்தேன், நீயோ...

தான்யா: நாம் புறப்படுவோம். இன்னைக்கு பதினைந்தாம் தேதி. நவம்பர் பதினைந்து. உனக்கு இந்தத் தேதி நினைவிருக்கா?

ஹேர்மன்: நினைவிருக்கு.

தான்யா: நான்கு ஆண்டுகளுக்கு முன்னால நாம் இந்த நாளைக் கொண்டாடினோம். ஆயிரத்துத் தொள்ளாயிரத்து முப்பத்தி எட்டு, நவம்பர் பதினைந்து. (இடைவெளி.)

ஹேர்மன் (மெதுவாக): தான்யா, என்னிடம் கூறு... (கஷ்டத்தோடு.) அப்ப ஏன் என்னை விட்டு விட்டு போனாய்?

தான்யா (முறுவலித்தபடி): அது எவ்வளவோ காலத்திற்கு முன்பு... நான் மறந்துட்டேன்.

ஹேர்மன் (எளிதாக): உண்மையைச் சொல்.

தான்யா (சிறிது நேர அமைதிக்குப் பிறகு): உன்னை எங்கிட்டே பொய் சொல்ல அநுமதிக்க நான் விரும்பலே. நான் உன்னை மிக அதிகமா காதலித்தேன். இருந்தாலும், இதெல்லாம் இப்போ முக்கியத்துவம் வாய்ந்திருக்கவில்லே. மேலும், அந்த நேரத்தில் நீ அதிகமாகத் துயரப் படலே, இல்லையா?

ஹேர்மன்: நான் மரீயாவைக் காதலிச்சேன். அதுபத்தி உன்னிடம் சொல்ல விரும்பினேன்... ஆனா என்னால் முடியலே.

இடைவெளி.

தான்யா (கட்டிலுக்குச் செல்கிறாள், தூங்கிக்கொண்டிருக்கும் யூரியைப் பார்க்கிறாள், பிறகு திடீரென்று ஹேர்மன் பக்கமாகத் திரும்புகிறாள்): உனக்குத் தெரியுமா, எனக்கு... எனக்குக்கூட ஒரு குழ... இருந்தாலும், அது இப்ப முக்கியமான விஷயம் இல்லே. ஒரு விஷயத்திலே என்னை விட நீ அதிக பாக்கியசாலி. நீ பெற்றுக்

கொள்ளாத ஒன்றை இழந்துட்டாய், ஆனா இது வெறுமையான இழப்புதான். (கட்டிலுக்குச் செல்கிறாள்.) இப்ப நீ ஓர் அருமையான மகனைப் பெற்றிருக்கிறாய்.

அமைதி. இருவருமே கட்டிலுக்கு மேலே குனிகிறார் கள்.

ஹேர்மன்: இனிய தோற்றங் கொண்ட பையன், இல்லையா அவன்?

தான்யா: மிகவும்.

ஹேர்மன்: மிக ஒழுங்கா மூச்சுவிடுறான்.

தான்யா: பாரு, அவன் முறுவலிக்கிறான்... ஏதோ மிக மகிழ்ச்சியான ஒன்றைப் பத்தி அவன் கனவு கண்டுகொண்டிருக்கணும்.

ஹேர்மன்: உனக்குத் தெரியுமா, ஒரு மகன் இருப் பது பெரிய மகிழ்ச்சியா இருக்கு!

தான்யா: சத்தியமாகத்தான்!

ஹேர்மன்: உனக்கு நினைவிருக்கிறதா, அந்த நேரத்தில் ஒன்னை நீ விரும்பலே.

தான்யா: ஆமாம்.

ஹேர்மன்: நீ ஒரு மாதிரியா இருந்தாய்!

தான்யா: உறுதியாக அப்படித்தான் இருந்தேன். (இடைவெளி.) நல்லது, நேரமாகி விட்டது, நான் போகணும். உன் கையைக் கொடு, உன் மகனைப் பார்த்துக்க, மகிழ்ச்சியாக இரு. (தனது மென்மயிர்த் தொப்பியையும், மேலங்கியையும் அணிந்துகொள்கிறாள்.)

ஹேர்மன் (அவளது கையை அழுத்தியபடி): யூரிக் காக உனக்கு நன்றி.

இடைவெளி.

தான்யா (எதிர்பாராதபடி): நான் போறதுக்கு முன்னே எனக்கு முத்தங் கொடு.

ஹேர்மன் தான்யாவை முத்தமிடுகிறான்.

(அவள் சன்னலுக்கு ஓடுகிறாள், அறையைச் சுற்றிலும் பார்க்கிறாள், முறுவலிக்கிறாள்.) நல்லது, இப்பொழுது எல்லாம் முடிஞ்சுபோச்சு!

பஷ்னியாக் மற்றும் மூன்று நண்பர்கள் — ''மாலுமி'', ''ஃபூர்மனவ்'', ''சபாயெவ்'' பின்தொடர ஷமானவா நுழைகிறாள். பறட்டைத் தலைமயிர் இளைஞன் கதவுக்கு அருகில் நிற்கிறான்.

ஷமானவா: உங்களை வழியனுப்பி வைக்கிறதுக்காக பிரதிநிதிக் குழு இங்கே வந்திருக்காங்க, தான்யா.

பஷ்னியாக்: தோழர் டாக்டர், எங்களோட சின்னஞ்சிறு பையனைக் காப்பாத்தியதுக்காக எங்களது நெஞ்சம் நிறைந்த நன்றியை உங்களுக்குத் தெரிவிக்க விரும்புறோம். பனிப்புயலைக் கடந்து, சாவைப் பற்றி அஞ்சாது எங்ககிட்ட எப்படி வந்தீங்க என்பதையும், விலை மதிக்க முடியாத உங்களுடைய வீரத்தைப் பத்தியும் மாஸ்கோவுக்கு நாங்க அறிவித்தோம். நீங்க எவ்வளவு அருமையான மனிதர் என்பதை நாடு முழுக்க

அறியட்டும். இதற்கிடையே, நாங்க உங்களுக்கு ஒரு பரிசு கொண்டுவந்திருக்கோம்... இதைக் காட்டு, ஸ்தெபான்.

''சபாயெவ்'': தோழர் டாக்டர், விஷேடமான ஒன்று என்று எண்ணிடாதீங்க. ஒரு வெள்ளரிக் காய் மட்டுமே. குளிர் காலத்தில் விஞ்ஞான முறைப்படி பயிர் செய்யப் பட்ட வெள்ளரிக் காய்.

''ஃபூர்மனவ்'' (தான்யாவிடம் வெள்ளரிக்காயை ஒப்படைத்தபடி): இதோ, தயவுசெய்து எடுத்துக் கங்க... இது எங்களுடைய ஒருவகையான சோதனை... இது எங்களுடைய மிகச் சிறந்த மாதிரி.

தான்யா (வெள்ளரிக்காயை எடுத்துக் கொண்டு): நன்றி... அரிதாக ஏதாவது உங்களுக்குச் சொல்ல விரும்புறேன், ஆனா எனக்குத் தெரியலே... நான்... நான் உங்களுடைய வெள்ளரிக்காயைத் தின்பேன்.

பஷ்னியாக் (பறட்டைத் தலைமயிர் இளைஞனைப் பார்த்துக்கொண்டு): ஏதாவது ஒன்னும் ஏன் சொல்லாமல் இருக்கே? உன்னை விருந்திற்கு அழைக்க வேண்டும் என்று கேட்டாய், இப்ப மூலையில் மறைந்து கொண்டு நிற்கிறாய், என்ன?

பறட்டைத் தலைமயிர் இளைஞன் (மிகவும் உணர்ச்சி வசப்படுகிறவன்): நான் சொல்ல விரும்பினேன்... பிடிக்கிற மாதிரி ஒரு நாடகம் எழுதுவது மிகவும் கஷ்டமான ஒன்னு... தனக்கும் ஒவ்வொருத்தருக்கும் ஒரே நேரத்தில் பிடிக்கிற ஒரு நாடகம். நான் சில முறை முயன்றேன்,

எதுவுமே வரலே... ஆனா உணர்வில்லாமல் நீங்க படுத்த ராத்திரியில், வெளியே பனிப்புயல் சீறிக் கொண்டிருந்த போது, எப்படிப்பட்ட நாடகத்தை எழுத முடியும் என்று நான் உடனடியாக உணர்ந்தேன். ஏற்கெனவே நான்கு காட்சிகள் எழுதியிருக்கேன். கடைசியும், மிகவும் மனத்தில் பதிகிற காட்சி இனிமேல் தான் எழுதணும். (இடைவெளி.) நாடகத்தை நான் முடிக்கின்ற போது, ஓர் அர்ப்பணத்துடன் நகரத்திற்கு உங்களுக்கு அதை நான் அனுப்புவேன். இதற்கிடையே, ஒரு நினைவுச் சின்னமாக இந்தப் பக்கத்தை எடுத்துக்கொள்ளுங்க — இதன் மீது சில கவிதைகளை நான் எழுதியிருக்கேன்.

தான்யா: நன்றி... நான் கவிதையில் பெரும் விருப்பங் கொண்டவள்... நாடகத்திலுங் கூட... நன்றி உங்களுக்கு.

''மாலுமி'': தோழர் டாக்டர், உணர்வில்லாமல் நீங்க அந்த இரவு படுத்திருந்தபோது, உங்களோட தற்காப்பின்மையை சாதகமாகப் பயன்படுத்திக்கிட்டேன், நீங்க என்னை மன்னிப்பதா இருந்தால், நான் உங்களை முத்தமிட்டேன். இரண்டு முறை. தயவு செய்வு என்னை மன்னிச்சிருங்க... மீண்டும் ஒரு முறை உங்களை முத்தமிட அநுமதியுங்க, இப்ப நீங்க உங்களுடைய முழுமையான உணர்வுடன் இருக்கிற போது...

*தான்யா சிரிக்கிறாள், அவனை முத்தமிடுகிறாள்.*

பஷ்னியாக்: வாங்க, இளைஞர்களே, நாம் போய்க்கிட்டிருக்கலாம்.

ஷமானவா: உங்களை வழியனுப்ப வாறோம், தான்யா... நாம் போகலாமா, ஹேர்மன்?

ஹேர்மன்: உண்மையா, நாம் போகணும். (தன் மனைவியிடம் அவளது மென்மயிர் ஜாக்கெட்டைக் கொடுக்கிறான்.)

தான்யா (கதவு வழியில்): முன்னாலே போங்க... உங்களை எட்டிப்பிடித்து விடுவேன். ஏதோ மறந்துட்டேன் என்று தோன்றுகிறது... என் கையுறைகளை மறந்துட்டேன்.

தான்யாவைத் தவிர எல்லாரும் அறையை விட்டு நீங்குகின்றனர்.

(கட்டிலுக்கு ஓடுகிறாள், அதற்கு மேலாகக் குனிகிறாள்.) போய் வருகிறேன், யூரி... பார், உன்னை மீண்டும் பிரிவதற்காகவே உன்னைக் கண்டுபிடித்தேன். ஆனா நாம் மீண்டும் சந்திப்போம், நீ வளர்ந்து பெரியவனாக இருப்பாய், அந்நேரம் நானோ கிழவியாக இருப்பேன். நாம் சந்திப்போம், ஒருவேளை நாம் ஒருவரையொருவர் அடையாளங் காண முடியாதபடிகூட இருக்கலாம். ஆனா ஒருவேளை... யாருக்குத் தெரியும்? யாருக்குத் தெரியும்?.. (சிறிது நேர அமைதிக்குப் பிறகு.) இப்போது தூங்கு, தூங்குவாய், சின்னவனே கண்மணியே...

இக்னாதவ் (நுழைந்துகொண்டு வாசற்படியிலேயே நின்று கொள்கிறான்): நான் என்னுடைய வேலைகளை முடிச்சுட்டேன், நகரத்திற்குப் புறப்படுகிறேன். நீங்களும் அங்கே போய்க்கொண்டிருப்பதாக இப்போதான் எங்கிட்டே சொன்

னாங்க. நீங்க விரும்பினா, நாம் ஒன்னாப் பயணம் செய்யலாம். என்னிடம் ஒரு நல்ல குதிரை இருக்கு.

*தான்யா மௌனமாக அவனைப் பார்க்கிறாள், முறு வலிக்கிறாள்.*

ஒருவேளை நீங்க சொல்றது சரி, எல்லாமே வேடிக்கையா இருக்கு. (கோபமாக.) குறிப்பாக உங்ககிட்டே ஒன்னு கேட்க ஆசைப்படுறேன், தத்யானா அலெக்சேயெவ்னா, இங்கு நான் உங்களிடம் சொன்னதை எல்லாம் மறந்துருங்க...

தான்யா: அந்தோ!.. அந்தோ, அலெக்சேய் இவா னவிச். எனக்குப் பெண்ணோட நினைவு இருக்கு... அது எதையும் மறக்காது...

இக்னாதவ் (நம்பிக்கை இல்லாதபடி): இப்ப உங் கள் வாழ்க்கை பூராவுக்கும் நீங்க என்னைப் பார்த்துச் சிரிக்கலாம்...

தான்யா: யாருக்குத் தெரியும்?.. (புன்முறுவ லோடு.) யாருக்குத் தெரியும்?.. (இடைவெளி.) நல்லது, மிக முக்கியமான விஷயம் பற்றி நீங்கள் ஏன் என்னிடம் கேட்டிருக்கக் கூடாது?

இக்னாதவ்: ஆனா நான்... உங்கள் கண் களிலிருந்து எல்லாத்தையும் என்னால பார்க்க முடியும்: எது பற்றியும் இனிமேல் நீங்க அஞ்ச வில்லே, அப்படித்தானே?

தான்யா: ஆமாம். எப்படி விசித்திரமானது, நான் எல்லாவற்றைப் புரிந்து கொள்வதற்காக அவ ரைப் பார்க்க வேண்டி இருந்தேனா... அத்தோட என் வாழ்க்கையில் ஒரு நாள் கூட நான்

இன்னமும் வாழவில்லை என்பது போலவும், எனது இளமை மட்டுமே கழிந்தது என்பது போலவும் ஒருவித வித்தியாசமான சுதந்திர உணர்வு! இனிமையான, வேடிக்கையான இள மை...

இக்னாதவ் (அவன் மிகவும் உணர்ச்சிவயப்பட் டான்): தத்யானா அலெக்சேயெவ்னா, எப் போதாவது என்றால்... இல்லை, நான் அதைக் கூறமாட்டேன்... எனக்காக இப்ப உங்களுக்கு நேரம் இல்லை என்பது எனக்குத் தெரியும்.

தான்யா (சன்னலுக்கு ஓடுகிறாள்): இந்தப் பனி யைப் பாருங்க! நம்மைப் பின்தொடர்ந்து அது பறக்கும், நாமோ நமது தலைகளைத் தூக்கி, குழந்தைகளாக இருந்தது போலவே ஐஸ்கிரீ மாகக் கருதி அதை விழுங்குவோம்... மேலும், மாலையில் நாம் நகரத்திற்குத் திரும்பும்போது, இந்த வெள்ளரிக்காயை வெளியே எடுத்து, அதற்கு உப்பிட்டு, பிறகு அதை ஆடம்பரமாகச் சாப்பிடுவோம்... (முறுவலித்தபடி.) இவ்வெள்ள ரிக்காய் எனது வாழ்க்கையில் மிக அரிய வெற்றிச் சின்னமாகிவிட்டது. மேலும் காலையில் நம் முடைய தடங்களை பனி மறைச்சுறும், நாம் இந்தச் சாலை வழியாக ஒருபோதும் பயணமே செய்ததில்லை போல.

இக்னாதவ் முறுவலிக்கிறான், வெள்ளரிக்காயை எடுத்து தன்னுடைய பைக்குள் போட்டுக்கொள்கிறான்.

இதை இழந்து விடவில்லை என்பது நினைவில் இருக்கட்டும்...

இக்னாதவ் (சன்னலுக்கு வெளியே பார்த்துக் கொண்டு): ஸ்லெட்ஜ் வந்துவிட்டது... நாம் போகலாம். (தனது கையை அவளுக்குத் தருகிறான்.)

திரை

*1938 (திரும்பத் தொகுத்தது 1947)*

## வாசக நேயர்களுக்கு

*இந்தப் புத்தகத்தைப் பற்றியும் இதன் தயாரிப்பைப் பற்றியும் தங்கள் கருத்தை அறியவும், அடுத்துவரும் வெளியீடுகள் சம்பந்தமாகத் தங்கள் ஆலோசனைகளை வரவேற்கவும்* **ராதுகா பதிப்பகம்** *மகிழ்வுடன் காத்திருக்கிறது. கடிதங்களைத் தயைசெய்து கீழ்வரும் முகவரிக்கு அனுப்புங்கள்:* Raduga Publishers, 17, Zubovsky Boulevard, Moscow, 119859, USSR.

**விற்பனையாளர்கள்**

**நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்**

**தலைமை அலுவலகம்**

*41, பி. சிட்கோ இண்டஸ்ட்ரியல் எஸ்டேட், சென்னை — 600098*

**ஷோ-ரூம்**

*136, மவுண்ட் ரோடு, சென்னை — 600002*

**கிளைகள்**

*80, மேலக் கோபுர வீதி, மதுரை — 625001*

*87/89, ஒப்பணக்கார தெரு, கோயம்பத்தூர் — 641001*

*சிங்காரத் தோப்பு, திருச்சிராப்பள்ளி — 620008*

*செர்ரி ரோடு, சேலம் — 636001*

*1, ஏ. திருவனந்தபுரம் சாலை, வண்ணாரப்பேட்டை, திருநெல்வேலி — 627003*

**விற்பனை நிலையம்**

*66, கீழராஜ வீதி, தஞ்சாவூர்*

ராதுகா பதிப்பகத்தின் அடுத்த வெளியீடு

# தமிழில் ருஷ்ய நாடகங்கள்

## நி. கோகல். **அரசு ஆய்வாளர்**

*மாபெரும் ருஷ்ய எழுத்தாளரான நிக்கலாய் கோகல் (1809 – 1852) 19ஆம் நூற்றாண்டு ருஷ்ய இலக்கியத்தில் விமர்சன எதார்த்தவாதம் மற்றும் அங்கதத்தின் வளர்ச்சியிலும் மனிதாபிமான மற்றும் ஜனநாயக கோட்பாடுகளின் வளர்ச்சியிலும் முக்கியமான தாக்கத்தைக் கொண்டிருந்தார்.*

**அரசு ஆய்வாளர்** *முதல் தடவையாக 1836இல் அரங்கேற்றப்பட்டது. அது ருஷ்ய நாடக மேடைக்கு முற்றிலும் புதியதாக இருந்தது. ஜாரிச ஆட்சியை அவர் கிண்டல் செய்து அன்றைய அரசாங்கத்தின் சீரழிவையும் ஊழலையும் அம்பலப்படுத்தினார்.*



அலெக்சேய் அர்புஸவ் எழுதிய 'தான்யா' நாடகம் சமகால நாடகங்களிலிருந்து வேறுபட்டது. 1939இல் அரங்கேறிய இந்த நாடகத்தில் ருஷ்யப் புரட்சி, உலகப் போர் முதலிய எந்தவிதமான சமுதாய, வரலாற்றுப் பின்னணியும் கிடையாது. மற்ற நாடகங்களைப் போல மேடை நிறையப் பாத்திரங்களோ, பிரமிக்க வைக்கும் காட்சி அமைப்புகளோ இல்லை. கவித்துவத்துடன் எழுதப் பெற்ற இந்த நாடகம் ஒரு சிறுகதையைப் போல ஒரே ஒரு பாத்திரத்தைச் சுற்றிச் சுழல்கிறது. அந்தப் பாத் திரத்தின் வாழ்வில் ஏற்படும் நிகழ்ச்சிகளை வைத்து, தனி மனித வாழ்க்கைக்கும் சமுதாய ஓட்டத்துக்கு மிடையில் இருக்க வேண்டிய உறவை அழுத்தமாகக் கோடிட்டுக் காட்டுவதன் மூலம் 'தான்யா' வெற்றி பெறு கிறது. மனித உறவுகளில் ஏற்படும் உணர்ச்சி வெளிப்பாடு களை நெஞ்சைத் தொடும் வகையில் சித்திரிப்பதாலும் நாடக ஆக்க உத்திகளை நேர்த்தியாகப் பயன்படுத்தி யிருப்பதாலும் எல்லா வகைகளிலும் நல்ல நாடமாக அமைந்து விடுகிறது 'தான்யா'.

தாமரை, செப்டம்பர் 1986